# கோவை
# தமிழ் வாசகம்

## ஐந்தாம் புத்தகம்




வித்வான் S. நாகராசன், B.O.L., B.T.,
தமிழாசிரியன்,
தூய மேரி போதனுமுறை உயர்நிலைப்பள்ளி, சேலம்.

ஸ்டாண்டர்ட் டெக்ஸ்ட்புக் கம்பெனி
ஈரோடு

பதிப்புரிமை] 1951 [விலை அணு 10

# முகவுரை

'கோவை தமிழ் வாசகம்' என்னும் இப்பாட நூல் வரிசை, கடைசியாக 1939-ஆம் ஆண்டில் ஆரம்ப வகுப்பு கட்கென்று கல்வித்துறையினர் வெளியிட்டுள்ள பாடவியலை முற்றிலும் தழுவி முறைப்படி அமைந்துள்ளது. அப் பாடவியலில் கண்டுள்ள ஒவ்வொரு குறிப்பும் இவ்வரிசை யில் சிறப்பிடம் பெற்றுள்ளது. மொழிப் பயிற்சி பற்றிய பொது விதிகளையும், பொருட் பயிற்சி பற்றிய சிறப்பு விதி களையும் கருத்திற் கொண்டு அவற்றோடு சிறிதும் முரண் படா வகையில் இஃது ஆக்கப்பட்டுள்ளது.

முதல் வகுப்பில் பெற்ற வாய்மொழிப் பயிற்சியை அடிப்படையாகக் கொண்டு, வேறு பல பொருள்களைப் பற்றிப் புதுச் சொற்களை அறிந்து பயன்படுத்தி உரை யாடல், சிறு சம்பவங்களைக் கோவையாகச் சொல்லல், படித்தல், மவுனமாகப் படித்தல், எழுதுதல் ஆகியவற்றில் பயிற்சி பெறுதற்கு இயன்ற முறையில் பாடங்களும், பயிற்சிகளும், படப் பயிற்சிகளும் பிறவும் இவ்வரிசையில் சிறப்பாக அமைந்துள்ளன. சிறுவர்களின் சொல்லறிவும் பேச்சுப் பயிற்சியும் உரம்பெறுதற்கு உறுதுணையாதற் பொருட்டுச் சில பாடங்கள் உரையாடல் முறையில் எழுதப்பட்டுள்ளன. சிறுவர்கள் விரும்பிப் படித்து மகிழ்ந்து பாடத்தக்க எளிய இனிய தேசீயப் பாட்டுகளும், கதைப் பாட்டுகளும், நீதிப் பாட்டுகளும், தெளிவான

விளக்கப் படங்களுடன் மிகுதியாகச் சேர்க்கப்பட்டுள்ளன.

இவ்வாற்ருன் இப்பாடநூல் வரிசை, தெளிவான பொருளறிவும் திருந்திய மொழிப் பயிற்சியும் பெறத் தொடங்கும் இளஞ்சிருர்க்கு உறுதுணையாக அமைந்து பெரும் பயன் விளைப்பதாக அமைந்திருத்தலின், தொடக்க நிலைக் கல்வியுலகத்தில் சிறக்க வரவேற்புக் கொள்ளும் என நம்புகின்ருேம்.

எங்கள் வேண்டுகோட் கிணங்கி, தமது தந்தையாரின் வாழ்க்கைக் குறிப்பும், அவர் அமைத்த கால்நடைப் பண்ணையின் வரலாறும், புகைப் படங்களும் தந்து உதவிய பழைய கோட்டை முப்பதாவது பட்டக்காரர் உயர்திரு. நல்ல சேனாபதி சர்க்கரை மன்ருடியார் அவர்கட்கு எமது வணக்கத்தோடு கூடிய நன்றி உரியதாகும்.

ஆசிரியன்.

# பொருளடக்கம்

## செய்யுட் பகுதி

# கோவை தமிழ் வாசகம்

## ஐந்தாம் புத்தகம்




## 1. கடவுள் வணக்கம்

சூரியன் வருவது யாராலே?
சந்திரன் தெரிவது எவராலே?
காரிருள் வானில் மின்மினிபோல்
கண்ணில் படுவன அவை என்ன?

பேரிடி மின்னல் எதனாலே?
    பெருமழை பெய்வது எவராலே?
ஆரிதற் கெல்லாம் அதிகாரி?
    அதைநாம் எண்ணிட வேண்டாமோ?
அந்தப் பொருளை நாம்நினைத்து
    அனைவரும் அன்பாய்க் குலவிடுவோம்.
எந்தப் படியாய் எவர் அதனை
    எப்படித் தொழுதால் நமக்கென்ன?
நிந்தை பிறரைப் பேசாமல்
    நினைவிலும் கெடுதல் செய்யாமல்
வந்திப் போம் அதை வணங்கிடுவோம்
    வாழ்வோம் சுகமாய் வாழ்ந்திடுவோம்.

—ஆஸ்தான கவிஞர் இராமலிங்கம் பிள்ளை




# 2. பாரத நாடு

நாம் வாழும் நாடு **இந்தியா.** இந்தியா நாடு நமது தாய் நாடாகும். இதற்குப் **பாரத நாடு** என்ற மற்றொரு பெயரும் உண்டு. முன்னொரு காலத்தில் இந்நாட்டைப் பரதன் என்னும் புகழ் பெற்ற அரசன் ஆண்டு வந்தான். அவனே முதன் முதலில் இந் நாட்டைப் பல வகையிலும் சீர் திருத்தி, சிறந்த அர சியலை அமைத்தான்; நாடு முழுவதையும் தன் ஒரு குடைக் கீழ்க் கொண்டு வந்து ஆண்டான். அதனால் அவனுக்குப் பிறகு இந்நாடு 'பாரத நாடு' என்று வழங்கலாயிற்று.

இப்பாரத நாடு மிகவும் பழமையான நாடாகும். இதில் வாழும் மக்கள் ஆதி காலத்திலிருந்தே நாகரி

கம் அடைந்திருந்தனர். அவர்கள் கல்வி கேள்விகளிலும், செல்வத்திலும் சிறந்து விளங்கினுர்கள்.

இந்நாடு மிக்க பரப்புள்ளதொரு நாடாகும். இது வளமையும், செழுமையும் மிகுந்து விளங்கும் நாடு. இதன்கண் பல உயர்ந்த மலைகளும், நீண்ட நதிகளும், பரந்த சம வெளிகளும் உள்ளன. இத்தகைய நாட்டின் வனப்பையும், செல்வச் சிறப்பையும் உயர்ந்த நாகரிகத்தையும் அறிந்த வெளி நாட்டு மக்கள் பலர் இதனை நேரிற் காண வேண்டி அடிக்கடி இங்கு வந்த வண்ணமாக இருக்கின்றனர்.

இந்நாட்டின் வடக்கில் **இமயமலை** என்னும் ஒரு மலை கோட்டைச் சுவர் போல் அமைந்துள்ளது. இது உலகிலேயே உயர்ந்த தொரு மலையாகும். இதன் மீது எப்பொழுதும் பனி உறைந்து கிடக்கும் காரணத்தால் இதற்கு இப்பெயர் வழங்குவதாயிற்று. இதில் உன்னதமான சிகரங்கள் பல உள்ளன. அவற்றுள் மிக்க உயர்வினையுடையது **எவரெஸ்டு** சிகரமாகும்.

இப்பரந்த நாட்டின் மத்தியில் **விந்திய மலை** என்பதொரு மலை உள்ளது. அது இந்நாட்டை இரு பெரும் பிரிவுகளாகப் பிரிக்கின்றது. இம்மலைக்கு வடக்கில் பரந்த சமவெளி ஒன்று இருக்கின்றது. அது **சிந்து கங்கைச் சம வெளி** அல்லது **ஹிந்துஸ்தானம்** எனப்படும். அது மிக்க வளப்பமுடையது. அதற்குக் காரணம் அதன் வழியே பாய்ந்தோடும் **சிந்து, கங்கை, யமுனை** முதலிய வற்றுத நதிகளே யாகும். அவை மிகுதியான நீரையும் வண்டலையும் கொண்டு வந்து சேர்ப்பதால் அது செழிப்பாக விளங்குகிறது.

விந்திய மலையின் தெற்கில் உள்ள பாகம் **தக்க ணம்** அல்லது **தென் இந்தியா** எனப் பெயர் பெறும். இது ஒரு பீடபூமியாகும். இதன் கிழக்கிலும் மேற் கிலும் கடற் கரையை ஒட்டினாற் போல் கிழக்குத் தொடர்ச்சி மலையும், மேற்குத் தொடர்ச்சி மலையும் அமைந்துள்ளன. இதன் தென் பாகத்திற்குத் **தமிழ கம்** என்பது பெயர். சிந்துவும் கங்கையும் வட பாகத்தைச் செழிக்கச் செய்வது போலக் கோதாவரி, கிருஷ்ணா, காவிரி முதலிய நதிகள் தென் பாகத்தை வளமுள்ளதாகச் செய்கின்றன.

இந்நாடு ஒரு விவசாய நாடாகும். இங்கு மற்றைத் தொழில்கள் செய்வதற்கும் போதிய வசதி கள் உள்ளன. மக்கள் உணர்வும் ஊக்கமும் கொண்டு உழைப்பார்களானால் நம் நாட்டிற்கு வேண்டிய எல்லாப் பொருள்களையும் நாம் இங்கேயே செய்து கொள்ளலாம். அப்பொழுது பிற நாட்டினரின் உத வியை நாடவேண்டிய அவசியமே இராது.

இத்தகைய பரந்த நாட்டில் வாழும் மக்கள், இனத்தாலும், மதத்தாலும், மொழியாலும், பழக்க வழக்கங்களாலும் வேறுபட்டுள்ளனர். எனினும் அவர்கள் யாவரும் பாரதத் தாயின் மக்களே ஆவர். ஆகவே அவர்கள் எல்லோரும் ஒன்றுபட்டுச் சகோத ரர் போல வாழ வேண்டும். அவ்வாறு வாழ்ந்தால் தான் நாடும் செழித்து விளங்கும்; நாட்டிற்கு ஏற்பட் டுள்ள பேரும் புகழும் நிலைத்து நிற்கும்; உலக மக்க ளிடையே நமக்கு ஏற்பட்டுள்ள மதிப்புக் குறையாமல் நிலை பெற்று நிற்கும்.

| | | |
|---|---|---|
| முற்காலம் | உன்னதமான | வளம் |
| வழங்கலாயிற்று | சிகரம் | விவசாயம் |
| பழமையான | மத்தியில் | உணர்வு |
| விசாலமான | பரந்த | ஊக்கம் |
| சமவெளி | பாய்ந்து | நாட |
| நாகரிகம் | மிகுதியான | கருதாமல் |
| கோட்டை | பீடபூமி | நிலைத்து நிற்கும் |
| உறைந்து | தொடர்ச்சி | பெருக |

## கேள்விகள்

1. நம் நாட்டிற்குப் பாரத நாடு எனப் பெயர் வழங்குவது ஏன் ?

2. வெளி நாட்டிலிருந்து மக்கள் நம் நாட்டிற்கு ஏன் வருகின்றனர் ?

3. சிந்து கங்கைச் சமவெளி செழுமையாய் இருப்பது ஏன் ?

4. தென் இந்தியாவில் பாயும் நதிகள் எவை ?

5. இந்திய மக்கள் எப்படி வாழ்வது நல்லது ?

## பயிற்சி

1. பரதன் வரலாற்றைத் தெரிந்துகொள்.

2. இந்தியா படத்தைப் பார்த்துப் பாடத்தில் வந்துள்ள ஆறு மலைகளைக் கண்டுகொள்.

3. நம் நாட்டில் வழங்கும் மதங்கள், மொழிகளைத் தெரிந்துகொள்.

4. சமவெளி, விசாலமான, உன்னதமான, பீடபூமி— இவற்றை உன் சொந்த வாக்கியங்களில் வைத்து எழுது.

5. பின்வரும் வாக்கியங்களில் ஒவ்வொன்றையும் இரண்டிரண்டு தனி வாக்கியங்களாகப் பிரித்து எழுது.

(1) அவை மிகுதியான நீரையும் வண்டலையும் கொண்டு வந்து சேர்ப்பதால் அது செழிப்பாக விளங்குகிறது.

(2) மக்கள் உணர்வும் ஊக்கமும் கொண்டு உழைப்பார்களானல் நம் நாட்டிற்கு வேண்டிய எல்லாப் பொருள்களையும் நாம் இங்கேயே செய்து கொள்ளலாம்.

6. **பரதன் இந்நாட்டை ஆண்டான்.** இவ் வாக்கியத்தில் **பரதன், நாடு** என்பன பெயரைக் குறிக் கின்றன. எனவே இவை பெயர்ச் சொற்கள். ஒன்றின் பெயரைக் குறிக்கும் சொல் **பெயர்ச்சொல்** எனப்படும்.

**ஆண்டான்** என்பது பரதனின் வினையை (செயலை)க் குறிக்கின்றது. எனவே இது வினைச்சொல். ஒன்றின் வினையை (செயலை)க் குறிக்கும் சொல் **வினைச்சொல்** எனப்படும்.

7. முதல் பாராவில் உள்ள பெயர்ச்சொற்களைச் சொல்.

8. இரண்டாவது பாராவில் உள்ள வினைச்சொற் களைச் சொல்.

# 3. எங்கள் பாரத நாடு

மன்னும் இமயமலை எங்கள் மலையே
மாநில மீததுபோல் பிறி திலையே !
இன்னறு நீர்க்கங்கை ஆறெங்கள் ஆறே
இங்கிதன் மாண்பிற் கெதிரெது வேறே ?
பன்னரும் உபநிடத நூலெங்கள் நூலே
பார்மிசை யேதொரு நூலிது போலே !
பொன்னொளிர் பாரத நாடெங்கள் நாடே
போற்றுவம் இஃதை எமக்கிலை ஈடே.

மாரத வீரர் மலிந்த நன்னாடு
மாமுனி வோர்பலர் வாழ்ந்த பொன்னாடு
நாரத கான நலந்திகழ் நாடு
நல்லன யாவையும் நாடுறு நாடு
பூரண ஞானம் பொலிந்த நன்னாடு
புத்தர் பிரானருள் பொங்கிய நாடு
பாரத நாடு பழம்பெரு நாடே
பாடுவம் இஃதை எமக்கிலை ஈடே.

—பாரதியார்

## பயிற்சி

1. இப் பாட்டுகளை மனப்பாடம் செய்.

2. இவற்றை இசையோடு பாடிப் பழகு.

3. இதுபோன்ற நாட்டுப் பாடல்களைப் படித்து மனப்பாடம் செய்.

4. பொருள் தெரிந்துகொள் : மன்னும், பிறிது, இன்னறு நீர், மாண்பு, பன்னரும், பார்மிசை, ஈடு, பாரதம், மலிந்த, கானம், திகழ், பூரண ஞானம், பொலிந்த.

5. பிரித்து எழுது : இன்னறு, பன்னறும், பொன்னொளிர், நன்னாடு.

6. பரதன் இந்நாட்டை ஆண்டான்—இது ஒரு வாக்கியம். இதில் பரதன் என்பது எழுவாய். ஆண்டான் என்பது பயனிலை. நாடு என்பது செயப்படுபொருள்.

எழுவாய், பயனிலை, செயப்படுபொருள் என்னும் மூன்றும் வாக்கியத்தின் உறுப்புகள்.




# 4. சீனச் சிறுவர்கள்

நீங்கள் தீபாவளி அன்று சீனவெடி வெடிக்கிறீர்கள் அல்லவா? அதற்கு அப்பெயர் ஏன் வந்தது தெரியுமா? அது முதலில் சீன தேசத்திலேயே மிகுதியாகச் செய்யப்பட்டது. அதனாலேயே அப் பெயர் பெற்றது. சீன தேசம் நம் தேசத்திற்குக் கிழக்கே உள்ளது. உலகத்தில் உள்ள மிகப் பெரிய தேசங்களில் சீன தேசமும் ஒன்று. சீன தேசம் மிக்க ஜனத்தொகை உள்ள தேசம். அது நம் இந்தியாவைப் போலவே மிக்க பழமையும் பெருமையும் உடைய தேசம் ஆகும். அதைச் சைன என்றும் சொல்வது உண்டு.

நம் நாட்டில் இருப்பதுபோலச் சீனவிலும் கிராமங்களே அதிகம். மக்களில் பெரும்பாலோர்

கிராமங்களிலேயே வாழ்கின்றனர். அவர்கள் மண் சுவர்களை உடைய கூரை வீடுகளிலேயே வசிக்கின்றனர். ஒவ்வொரு வீட்டின் முன்புறத்திலும் தோட்டம் உண்டு. தோட்டத்தின் வேலிகளில் முசுக்கட்டைச் செடிகளை வளர்ப்பார்கள். முசுக்கட்டை இலை பட்டுப் புழுவுக்குச் சிறந்த உணவாகும். சீனர்கள் பட்டுப் புழு வளர்த்துப் பட்டு எடுப்பதில் தேர்ந்தவர்கள். சீனு பட்டுக்குப் பெயர்போன தேசமாகும்.

சீனர்கள் தோட்டங்களில் காய்கறிகளைப் பயிர் செய்வார்கள்; வயல்களில் நெல் பயிரிடுவார்கள். சீனர்கள் தேநீர்ப் பானத்தை விரும்பிப் பருகுவார்கள். அவர்கள் மலைச் சரிவுகளில் தேயிலையைப் பயிர் செய்துகொள்ளுகிருர்கள். சீனர்கள் பலர் மீன்பிடித்து வாழ்கின்றனர். அவர்கள் மீன் பிடிக்க உபயோகிக்கும் படகுக்கு 'ஜங்ஸ்' என்பது பெயர். அவர்கள் அப் படகுகளிலேயே வசிக்கின்றனர். சீனர்கள் உணவு உண்பது விநோதமாக இருக்கும். அவர்கள் நம்மைப்போல் சோற்றைக் கையால் எடுத்து உண்பதில்லை; தட்டையான இரு குச்சிகளால் அள்ளி உண்கிருர்கள்.

முற்காலத்தில் அயல் நாட்டார் சீனுவின்மீது அடிக்கடி படையெடுத்தார்கள். அவர்கள் அந் நாட்டைத் தாக்கிக் கொள்ளையடித்து வந்தார்கள். அக்காலத்தில் சீன மக்கள் தங்கள் நாட்டைச் சுற்றி மிகப் பெரிய மதில்சுவரை எழுப்பினுர்கள். பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் எழுப்பிய அம்மதில் சுவர் இன்னும் அப்படியே இருக்கிறது.

சீன தேசத்துச் சிறுவர்களின் வாழ்க்கை நமக்கு வியப்பை உண்டாக்குவதாகும். சீன மக்கள் ஆண்

குழந்தைகளையே மிகவும் விரும்புகிறார்கள்; பெண் குழந்தைகளை வெறுக்கிறார்கள். ஆண் குழந்தை பிறந்தால் அவர்கள் சந்தோஷமாகக் கொண்டாடு கிறார்கள்; பெண் குழந்தை பிறந்தால் வருத்தப் படுகிறார்கள். இந்த மூடப் பழக்கம் அவர்களிடம் வேரூன்றி இருக்கிறது. இதற்கு அவர்களுடைய அறியாமையே காரணமாகும்.

சீனச் சிறுவர்கள் பார்வைக்கு அழகாக இருக்க மாட்டார்கள். அவர்கள் குட்டையாக இருப்பார்கள். அவர்கள் இருண்ட மஞ்சள் நிறம் உடையவர்கள். அவர்களுடைய முகம் தட்டையாயும், மூக்கு சப்பை யாயும், கண்கள் குறுகியும் இருக்கும்.

சீனாவில் சிறுவர்களும் சிறுமிகளும் தங்கள் தலை மயிரை நீளமாக வளர்த்து, பின்னல் இட்டு, பின்புறம் தொங்கவிட்டுக் கொள்ளுவார்கள். சிறுமிகள் தங்கள் பாதங்களை இறுகக் கட்டி, விரல்களை வளரவிடாமல் தடுத்துக் கொள்ளுவார்கள். அதனால் சீனச் சிறுமி களின் பாதம் குறுகி இருக்கும். அவர்களால் வேக மாக நடக்க முடியாது. இப்பழக்கங்கள் இப்பொழுது சிறிது சிறிதாகக் குறைந்து வருகின்றன.

நம் நாட்டில் சிறுவர் சிறுமிகளின் பிறந்த தினத்தைத் தனித்தனியாகக் கொண்டாடுகிறோம் அல்லவா? சீனர்கள் அவ்வாறு கொண்டாடுவது இல்லை. புது வருஷம் பிறக்கும் தினத்தையே அந் நாட்டு மக்கள் அனைவரும் தங்கள் பிறந்த தினமாகக் கொண்டாடுகிறார்கள். அன்று சீனச் சிறுவர்களும் சிறுமிகளும் பல பரிசுகள் பெற்று மகிழ்வார்கள்; பட்டாசு சுட்டுக் களிப்பார்கள்; பலவகைப் பட்டங் களைப் பறக்கவிட்டு விளையாடுவார்கள்.

சீனச் சிறுவர்கள் இளமையிலேயே பாட சாலையில் சேர்ந்து படிக்கத் தொடங்குவார்கள். சீன பாஷை மற்றப் பாஷைகளைப் போன்றது அன்று. அது கற்பதற்கு மிகவும் அரிதானது. அந்தப் பாஷையில் கற்கவேண்டிய எழுத்துக்கள் மிகவும் அதிகம். சீன எழுத்துக்கள் பூக்கள் போன்ற வடிவம் உடையவை. அவை எழுதுவதற்கு மிகவும் கடின மானவை. நாம் புத்தகங்களை இடப்பக்கத்திலிருந்து வலப்பக்கமாகப் படிக்கிறோம்; மேலிருந்து கீழ் நோக்கிப் படித்துக்கொண்டு போகிறோம். சீன பாஷையில் அப்படி இல்லை. வலப்பக்கத்திலிருந்து இடப்பக்கமாகப் படிக்க வேண்டும்; கீழிருந்து மேல் நோக்கிப் படித்துக்கொண்டு போகவேண்டும். இவ் வளவு கஷ்டம் இருந்தும் சீனச் சிறுவர்கள் அப் பாஷையை முயன்று கற்கின்றனர்.

சீனச் சிறுவர்களுக்கு மிட்டாய் தின்பதில் விருப்பம் அதிகம். அவர்கள் பாடசாலைக்குப் போகும் போதும், பாடசாலையிலிருந்து திரும்பி வரும்போதும் மிட்டாய் வகைகளை வாங்கித் தின்பார்கள். பொது வாகச் சீனச் சிறுவர்கள் அனைவரும் நற்குணம் உடையவர்கள்; அன்பும் அடக்கமும் வாய்ந்தவர்கள். பெற்றோர்களிடமும் பெரியோர்களிடமும் அவர்கள் வணக்கமாகவும் மரியாதையாகவும் நடந்துகொள் வார்கள்.

சீனமக்கள் பெரும்பாலும் ஏழைகள். அவர்கள் உடல் வருந்தி உழைத்து வாழ்க்கை நடத்துபவர்கள். அவர்கள் பயிர்த்தொழில் செய்தும், தேயிலைத் தோட் டங்களில் வேலை செய்தும், பட்டுப் பூச்சி வளர்த்துப் பட்டு எடுத்தும் ஜீவனம் செய்கிறார்கள். சீனச் சிறு

வர்வளும் சிறுமிகளும் அவ்வேலைகளில் பெரியோர்க்கு உதவி செய்வார்கள். சீனர்கள் உழைப்பாளிகளாகவும், பொறுமைசாலிகளாகவும் விளங்குவதற்கு அவர்கள் இளமையில் பெறும் இப்பழக்கமே காரணமாகும்.

| | | |
|---|---|---|
| மிகுதியாக | எழுப்பி | அரிது |
| ஒவ்வொரு | வியப்பு | முயன்று |
| பின்புறம் | மூடப்பழக்கம் | திரும்பி |
| பானம் | வேரூன்றி | நற்குணம் |
| விரும்பி | அறியாமை | வாய்ந்து |
| பருகு | இருண்ட | ஜீவனம் |
| விநோதம் | பரிசு | உதவி |
| அள்ளி | பலவகை | காரணம் |

## கேள்விகள்

1. சீனா எப்படிப்பட்ட தேசம் ஆகும்?
2. சீனர்களிடம் வேரூன்றி உள்ள மூடப் பழக்கம் என்ன?
3. சீனச் சிறுவர்கள் பார்வைக்கு எப்படி இருப்பார்கள்?
4. சீன பாஷை எப்படிப்பட்டது? ஏன்?
5. சீனச் சிறுவர்கள் எத்தகைய குணமுள்ளவர்கள்?
6. சீனர்கள் செய்யும் தொழில்கள் யாவை?

## பயிற்சி

1. உலகப் படத்தைப் பார்த்துச் சீனா தேசம் உள்ள இடத்தைத் தெரிந்துகொள்.
2. சீனர்களைப் பற்றிய புத்தகங்களைப் படித்து அவர்களுடைய வாழ்க்கையைத் தெரிந்துகொள்.
3. அயல்நாட்டுச் சிறுவர்களைப் பற்றிய புத்தகங்களைப் படித்து அவர்களைப்பற்றித் தெரிந்துகொள்.
4. இதனைச் சீனச்சிறுவன் ஒருவன் கூறுவதுபோல எழுது.

5. எதிர்ச்சொல் கூறு: மிகுதி, அரிது, நற்குணம், பழமை, பெருமை, வலம், கீழ்.

6. பானம், பரிசு—பொருள் தெரிந்துகொள்.

7. ஒவ்வொரு, பலவகை, அறியாமை, விநோதம்—இவற்றை உன் சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுது.

8. தேசம் - நாடு, பாஷை - மொழி, ஜீவனம் - வாழ்க்கை.

9. மூன்ருவது பத்தியில் உள்ள வினைச்சொற்களை எடுத்து எழுது.

10. கீழ்வரும் வாக்கியங்களை ஒரே வாக்கியமாகச் சேர்த்து எழுது.

(i) சீனர்கள் கிராமங்களிலேயே வாழ்கின்றனர். அவர்கள் மண் சுவர்களுடைய கூரை வீடுகளிலேயே வசிக்கின்றனர்.

(ii) சிறுமிகள் தங்கள் பாதங்களை இறுகக் கட்டி விரல்களை வளரவிடாமல் தடுத்துக் கொள்ளுவார்கள். அதனால் சீனச் சிறுமிகளின் பாதம் குறுகியிருக்கும்.

11. பட்டு, நாடு, வருஷம், கை, அன்பு, வணக்கம்—இவற்றில் பட்டு என்பது ஒரு பொருளின் பெயரைக் குறிக்கிறது. ஆகவே அது பொருட்பெயர் எனப்படும்.

நாடு என்பது ஓர் இடத்தின் பெயரைக் குறிக்கிறது. ஆகவே அது இடப்பெயர் எனப்படும்.

வருஷம் என்பது ஒரு காலத்தின் பெயரைக் குறிக்கிறது. ஆகவே அது காலப்பெயர் எனப்படும்.

கை என்பது ஒரு சினையின் (உறுப்பின்) பெயரைக் குறிக்கிறது. ஆகவே அது சினைப்பெயர் எனப்படும்.

அன்பு என்பது ஒரு பண்பின் (குணத்தின்) பெயரைக் குறிக்கிறது. ஆகவே அது பண்புப்பெயர் (குணப்பெயர்) எனப்படும்.

வணக்கம் என்பது ஒரு தொழிலின் பெயரைக் குறிக்கிறது. ஆகவே அது தொழிற்பெயர் எனப்படும்.

பெயர்ச்சொல் பொருட்பெயர், இடப்பெயர், காலப் பெயர், சினைப்பெயர், பண்புப்பெயர், தொழிற்பெயர் என ஆறுவகைப்படும்.



# 5. கரும்புப் பயிர்

நம் நாடு விவசாய நாடு. பயிர்த் தொழிலே நம் நாட்டு மக்களில் பெரும்பலோர்க்கு முக்கியத் தொழிலாக உள்ளது. இதில் பலவகையான பயிர்கள் செய்யப்படுகின்றன. அவற்றுள் கரும்பும் ஒன்று. கரும்பு நாணல் இனத்தைச் சேர்ந்தது. இதனை நன்செய் நிலத்தில் பயிர் செய்வர். கரும்பில் பலவகை உண்டு. சிலவற்றிற்கு மேல் தோல் மிருதுவாக இருக்கும்; சிலவற்றிற்கு மேல் தோல் உறுதியாக இருக்கும். கரும்பு அதிக உஷ்ணமுள்ள பகுதிகளில் தான் நன்ருகப் பயிராகும். கரும்புப் பயிருக்குத் தண்ணீர் மிகுதியாக வேண்டும்.

கரும்புப் பயிர் செய்வதற்கு முன் நிலத்தை நன்ருக உழுவார்கள். பிறகு உரம் சேர்த்துப் பண்

படுத்துவர். அவ்வாறு பண்படுத்திய நிலத்தில் பாத்தி களை அமைப்பர். பின்னர் முற்றிய கருப்பங்கழிகளை ஒவ்வொன்றிலும் ஒன்றிரண்டு கணுக்கள் இருக்கு மாறு துண்டுகளாகச் செய்வர். அவ்வாறு செய்யப் பட்ட துண்டுகளைப் பாத்திகளில் ஊன்றித் தண்ணீர் பாய்ச்சுவார்கள். துண்டுகளில் உள்ள கணுக்களில் முளைகள் இருப்பதால் கரும்பு நட்ட சில நாட்களில் குறுத்து விட்டுத் தளிர்க்கும்.

கரும்புப் பயிர் நன்ருக வளர அதற்கு அடிக்கடி தண்ணீர் பாய்ச்சிவர வேண்டும். கருப்பஞ் சோலை கள் சுமார் பத்துப் பன்னிரண்டு அடி உயரம் வளரும். கரும்பைப் பயிரிடுபவர்கள் கருப்பங் கழிகள் காய்ந்து வெடித்து விடாமல் இருப்பதற்காகச் சோகைகளைக் கழிகளின் மேலேயே சுற்றி வைப்பர். கரும்பு நட்ட ஏழு எட்டு மாதங்களில் வளர்ந்து முதிர்ந்து விடும். முதிர்ந்த கரும்பிலிருந்து தான் வெல்லமும் சர்க்கரை யும் செய்யப்படுகின்றன.

கரும்பு நம் நாட்டில் ஐக்கிய மாகாணம், பீகார், சென்னை முதலிய இடங்களில் மிகுதியாகப் பயிர் செய்யப்படுகின்றது. ஆனல் மற்ற மாகாணங்களை விட நம் மாகாணத்தில் தான் கரும்பு பயிரிடுவதற்குத் தகுதியான சீதோஷ்ணமும் நிலவளமும் பொருந்தி யுள்ளன. இங்குப் பயிராகும் கரும்பிலிருந்து எடுக் கப் படும் சர்க்கரை மற்ற மாகாணங்களில் எடுக் கப்படும் சர்க்கரையை விடத் தரத்தில் உயர்ந்ததாகக் கருதப்படுகிறது.

நன்ருக முற்றிய பின் கருப்பங் கழிகளை வெட்டி ஆலைக் களத்திற்குக் கொண்டு செல்வார்கள். அங்கு அவற்றின் சோகைகளை நீக்கிவிட்டு, அவற்றைப் பல

துண்டுகளாகச் செய்து ஆலையில் கொடுப்பார்கள். ஆலையில் உள்ள இரும்பு உருளைகள் கருப்பங்கழிகளை நசுக்கிப் பிழிந்து சாறு வேறு சக்கை வேருகப் பிரிக்கும். அவ்வாறு பிழிந் தெடுக்கப்படும் சாறு தனியே ஒரு பானையில் வந்து விழும். பானையில்




விழும் சாற்றைப் பெரிய இரும்புக் கொப்பரைகளில் ஊற்றிக் காய்ச்சுவார்கள். சாறு கொதித்து வரும் பொழுது அதில் உள்ள அழுக்கை நீக்குவதற்காக அதனோடு கொஞ்சம் சுண்ணும்பைச் சேர்ப்பர். அப்பொழுது அதில் உள்ள அழுக்குத் திரண்டு மேலே வரும். அதனைத் துடுப்பால் சிறிது சிறிதாக எடுத்து அப்புறப் படுத்துவார்கள். கொதிக்கும் கருப்பஞ்சாறு குழம்பு போலாகும். அப்பொழுது அதனை ஆழமில் லாத மரத் தொட்டியில் ஊற்றி ஆற வைப்பார்கள்.

தொட்டிகளில் ஊற்றிய சாறு நன்ருக ஆறுவதற்கு முன் ஒரு கட்டையினுல் அதைத் தேய்த்துக் கட்டிகளை உடைப்பர். அதுவே சர்க்கரையாகும். அது பழுப்பு நிறமாய் இருக்கும். அதனுல் அது **பழுப்புச் சர்க்கரை** எனப்படும். கொதித்த சாற்றை மரத் தொட்டிகளில் ஊற்ருமல் வெல்லம் செய்வதற்கான அச்சுகளில் ஊற்றி ஆற வைத்தால் வெல்ல மாகிவிடும்.

பழுப்புச் சர்க்கரையிலிருந்தே வெள்ளைச் சர்க்கரை செய்யப்படுகிறது. பழுப்புச் சர்க்கரையைத் தண்ணீரில் கரைத்து அதனேடு சில மருந்துகளைச் சேர்த்துக் கொதிக்க வைத்தால் அது பழுப்பு நிறம் போய் வெண்மை நிறமாக மாறிவிடும். அது **வெள்ளைச் சர்க்கரை** எனப்படும்.

முற்காலத்தில் நம் நாட்டில் கரும்புப் பயிர் பிரபலமாக இருந்தது. ஆனுல் இடையில் வெளி நாடுகளிலிருந்து சர்க்கரை வரத் தொடங்கியதனுல் இத்தொழில் குன்றலாயிற்று. ஆனுல் இப்பொழுது நம் நாட்டில் கரும்புப் பயிர் விருத்தி அடைந்து வருகிறது. சர்க்கரை செய்யும் தொழிற்சாலைகளும் அதிகரித்து வருகின்றன. நம் மாகாணத்தில் நெல்லிக்குப்பம், ஹோஸ்பேட்டை, மேல்பட்டி ஆகிய இடங்களில் சர்க்கரை செய்யும் ஆலைகள் உள்ளன.

கோயம்புத்தூரில் உள்ள அரசாங்க விவசாயக் கல்லூரியைச் சேர்ந்த சர் டி. எஸ். வேங்கடராமன் என்பவர் கரும்பின் தரத்தை உயர்த்தவும், சர்க்கரைப் பொருளை அதிகரிக்கச் செய்யவும் ஆராய்ச்சி செய்து வெற்றியும் பெற்றுள்ளார். இவரைப் போன்ற அறிவாளிகள் செய்யும் ஆராய்ச்சிகளின் பயனுக

நம் நாட்டில் கரும்புப் பயிர் விருத்தி அடைவது திண்ணம்.

| | | |
|---|---|---|
| விவசாயம் | அடிக்கடி | மாறி |
| பெரும்பாலோர் | முதிர்ந்த | முற்காலம் |
| உறுதி | பொருந்தி | தொடங்கி |
| பகுதி | தகுதி | குன்றல் |
| மிகுதி | தரம் | விருத்தி |
| பண்படுத்தல் | பிழிந்து | கல்லூரி |
| கழிகள் | சாறு | போன்ற |
| குறுத்து | கொப்பரை | திண்ணம் |
| தளிர்க்கும் | குழம்பு | |

## கேள்விகள்

1. கரும்புப் பயிர் எந்த இனத்தைச் சேர்ந்தது?
2. கரும்பு எவ்வாறு பயிர் செய்யப்படுகிறது?
3. கருப்பஞ் சோகைகளைக் கழிகளின்மேல் சுற்றுவது ஏன்?
4. கரும்புப் பயிர் எப்படிப்பட்ட நாடுகளில் மிகுதியாகப் பயிராகும்?
5. சர்க்கரை எவ்வாறு செய்யப்படுகிறது?
6. நம் நாட்டில் கரும்பாலைகள் உள்ள இடங்கள் எவை?
7. கரும்புப் பயிர் சம்பந்தமாக ஆராய்ச்சி செய்த பெரியவர் யார்?

## பயிற்சி

1. கரும்பு வயலைச் சென்று பார்.
2. ஆலைக் களத்திற்குச் சென்று கரும்பு ஆடுவதைப் பார்.
3. கருப்பஞ் சாற்றிலிருந்து வெல்லம், சர்க்கரை செய்வதைப் பார்த்துத் தெரிந்துகொள்.

1814—3

4. பெரும்பாலோர், பண்படுத்தல், அடிக்கடி— இவற்றை உன் சொந்த வாக்கியங்களில் வைத்து எழுது.

5. பிரித்து எழுது: தண்ணீர், கருப்பங்கழிகள், தொழிற்சாலை.

6. சீதோஷ்ணம்—சீத+உஷ்ணம், இது சமஸ் கிருதத் தொடர். இதற்குப் பதிலாகத் 'தட்ப வெப்பம்' என்னும் தமிழ்த் தொடரை வைத்து எழுது.

7. கீழ்வரும் வாக்கியங்களில் உள்ள பெயர்ச் சொற்களையும் வினைச் சொற்களையும் கூறு.

(i) இந்நாட்டைப் பரதன் என்னும் அரசன் ஆண்டு வந்தான்.

(ii) சீனர்கள் தோட்டங்களில் காய்கறிகளைப் பயிர் செய்வார்கள்.

8. பின்வரும் வாக்கியங்களில் உள்ள எழுவாய் பயனிலை செயப்படுபொருள்களைக் கூறு.

(i) பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் எழுப்பிய அம் மதில்சுவர் இன்னும் அப்படியே இருக்கிறது.

(ii) கரும்புப் பயிர் விருத்தியடைவது திண்ணம்.

(iii) கரும்புப் பயிருக்குத் தண்ணீர் மிகுதியாக வேண்டும்.

9. **சிவன், திருமால், பரதன், புத்தர், கண்ணகி.**

இச்சொற்களில் சிவன், திருமால் என்பன தேவரைக் குறிக்கின்றன. பரதன், புத்தர், கண்ணகி என்பன மனிதரைக் குறிக்கின்றன. இவை **உயர்திணை.** தேவரும் மனிதரும் உயர்திணை.

10. **புழு, பூச்சி, மலை, ஆறு, ஆலை.**

இவை தேவரும் மனிதரும் அல்லாதவற்றைக் குறிக்கின்றன. இவற்றுள் புழு, பூச்சி என்பன உயிருள்ளவை; மலை, ஆறு, ஆலை என்பன உயிரில்லாதவை. இவை **அஃறிணை.** தேவரும் மனிதரும் அல்லாத உயிருள்ளவையும் உயிரில்லாதவையும் ஆகிய யாவும் **அஃறிணை.**




# 6. குதிரை முட்டை

முன்னொரு காலத்தில் பரமார்த்த குரு என்பவர் ஒருவர் இருந்தார். அவருக்கு மட்டி, மடையன், மூடன், மூர்க்கன், மிலேச்சன் என்னும் சீடர்கள் ஐவர் இருந்தனர். பரமார்த்த குரு நாள்தோறும் சீடர்களோடு பல ஊர்களுக்குச் சென்று வருவார். அவர் கிழப்பருவம் உடையவர் ஆகையால் அவரால் நெடுந்தூரம் நடந்து பிரயாணம் செய்ய முடியவில்லை. சீடர்கள் அவரை ஒரு குதிரை வாங்கிக் கொள்ளும்படி கூறினர். குரு, 'குதிரையின் விலை என்ன இருக்கும்?' என்று விசாரித்தார். ஊரில் உள்ளவர்கள் 'ஐம்பது பொன், நூறு பொன்

இருக்கும்' என்றனர். குரு, 'அவ்வளவு பணத்திற்கு நான் எங்கே போவேன்?' என்று நடந்தே பிரயாணம் செய்து வந்தார். ஆனல் சீடர்கள் குதிரையைப் பற்றிய நினைவாகவே இருந்தனர்.

ஒரு நாள் பரமார்த்த குருவின் கறவைப் பசு காணுமல் போய்விட்டது. குரு பசுவைத் தேடிப் பிடித்து வரும்படி மட்டியை அனுப்பினர். மட்டி ஊர் ஊராகச் சென்று பசுவைத் தேடி அலைந்தான். எங்கும் பசு அகப்படவில்லை. மூன்று நாள்களுக்குப் பிறகு மட்டி வெறுங்கையோடு திரும்பி வந்தான். ஆனல் அவன் மகிழ்ச்சி தரும் செய்தி ஒன்று கொண்டு வந்தான். அவன் குருவை அடைந்து, "ஐயனே, பசு கிடைக்க வில்லை. ஆனல் அதைக் காட்டிலும் சிறந்தது ஒன்று கண்டேன். மிகக் குறைந்த விலையில் நமக்குச் சிறந்த குதிரை கிடைத்தது' என்று மகிழ்ச்சியோடு கூறினன்.

குரு பசுவை மறந்து குதிரையைப் பற்றி விசாரிக்கலானர். மட்டி, 'ஐயனே, நான் பசுவைத் தேடி ஊர் ஊராகச் சென்று, தோட்டம் தோட்டமாகவும், கொல்லை கொல்லையாகவும் அலைந்தேன். அப்பொழுது ஓர் ஏரி அருகில் சில குதிரைகள் மேய்வதைக் கண்டேன். உடனே அவற்றின் அருகில் சென்று நோக்கினேன். அங்குப் பல குதிரை முட்டைகளையும் கண்டேன். அவை போன்ற குதிரை முட்டைகளை நான் இதுவரையில் கண்டதில்லை. ஒவ்வொன்றும் இரு கைகளிலும் அடங்காத அத்தனைப் பெரியவை. சாம்பல் பூத்த வெண்மை நிறமானவை. ஒன்ரு? இரண்டா? நூற்றுக் கணக்கான முட்டைகள்! நான் அவை குதிரை முட்டைதான என்று

சந்தேகப்பட்டு, அங்கு வந்த ஒருவரைக் கேட்டேன். அவர் ‘ஆம், இவை உயர்ந்த வகைக் குதிரை முட்டைகளே’ என்று கூறி என் ஐயத்தைப் போக்கினர். ஒவ்வொன்றின் விலை நான்கு அல்லது ஐந்து பொன்னுக்கு அதிகமாக இராது என்றும் அவர் கூறினர். நாம் அம்முட்டைகளில் ஒன்றை வாங்கி வருவது நல்லது’ என்று கூறி முடித்தான்.

மட்டி கூறியவற்றைக் கேட்டு, குருவும் மற்றச் சீடர்களும் மட்டற்ற மகிழ்ச்சி அடைந்தார்கள். குரு மட்டியின் கையில் ஐந்து பொன்னைக் கொடுத்து, அவனுக்குத் துணையாக மடையன் என்பவனையும் அனுப்பினர். மட்டி மடையனையும் அழைத்துக் கொண்டு நெடுந் தூரம் நடந்து சென்று, முன் தான் கண்ட ஏரியை அடைந்நான்; அதன் அருகில் செடிகளின் இடையே கிடந்த சாம்பல் பூசணிக்காய்களை மடையனுக்குக் காட்டினன். பிறகு இருவரும் குடிசையில் இருந்த குடியானவனிடம் சென்று, “ஐயா, எங்கள் குருவுக்கு ஒரு குதிரை முட்டை வேண்டும். இந்தக் கொல்லையில் உள்ள முட்டைகளில் ஒன்றை எங்கட்குத் தரவேண்டும். அதற்கு உரிய விலையைக் கொடுத்து விடுகிறோம்’ என்று பணிவாக வேண்டிக் கொண்டனர். குடியானவன் அவர்கள் அறியாமையைத் தெரிந்துகொண்டு, ‘இவை உயர்ந்த வகைக் குதிரை முட்டைகள்; அதிக விலை உள்ளவை. உங்களால் இவற்றிற்கு விலை கொடுக்க முடியுமோ ?’ என்றான். உடனே அவர்கள், ‘இவற்றின் விலையை நாங்கள் அறிவோம். ஒரு முட்டையின் விலை ஐந்து பொன்தானே! ஐந்து பொன்னைப் பெற்றுக் கொண்டு முட்டையைக்

கொடுங்கள்' என்றனர். குடியானவன் 'முட்டை யின் விலை ஐந்து பொன்னுக்கும் அதிகம். ஆனால், நீங்கள் நல்லவர்களாக இருக்கிறீர்கள். குருவுக்காகக் கேட்கிறீர்கள். உங்களுக்காக ஐந்து பொன் னுக்கு ஒரு முட்டை தருவேன். இக்குறைந்த விலையை வேறு யாரிடமும் சொல்லாதீர்கள்' என்று கூறி, ஐந்து பொன்னை வாங்கிக் கொண்டு, பெரிய பூசணிக்காய் ஒன்றைப் பறித்துக் கொடுத்தான்.

மட்டி பூசணிக்காயை வாங்கித் தன் தலைமீது வைத்துக் கொண்டான். பிறகு இருவரும் உயர்ந்த குதிரை முட்டையைக் குறைந்த விலைக்கு வாங்கின தங்கள் சாமர்த்தியத்தைப் பற்றிப் பெருமையாகப் பேசிக்கொண்டே வழி நடந்தனர். இடையில் ஓர் இடுக்கு வழி குறுக்கிட்டது. அவர்கள் அவ்வழியில் செல்லும்பொழுது, மேலே தாழ்ந்து வளைந்திருந்த மரக்கிளை மட்டியின் தலைமீது இருந்த பூசணிக்கா யைத் தடுத்துத்தள்ளியது. பூசனிக்காய் கீழே இருந்த புதரில் விழுந்து உடைந்து சிதறியது. அப்புதரில் பதுங்கி யிருந்த முயல் ஒன்று அந்த அதிர்ச்சியைக் கேட்டுப் பயந்து வெளிப்பட்டு ஓடியது.

பூசணிக்காய் உடைந்ததையும்,' உடனே அங் கிருந்து முயல் ஓடியதையும் மட்டியும் மடையனும் கண்டனர்; முட்டைக் குள்ளிருந்த குதிரைக் குட்டியே ஓடுகிறது என்று எண்ணினர்; 'குதிரைக் குட்டி! குதிரைக் குட்டி!' என்று கூவிக் கொண்டே அதனைப் பிடிக்கப் பின்தொடர்ந்தனர். அவர்கள் கல்லும் முள்ளும் காடும் மேடும் பாராமல் அம்முயல் போனவழியே ஓடினர். அவர்களுடைய ஆடைகள் முள் செடிகளில் மாட்டிக் கிழிந்தன; முள்ளும்

கல்லும் குத்தியதால் கால்களில் இரத்தம் பெருகியது ; புதர்களுக்குள் நுழைந்து ஓடியதனுல் உடம்பெல்லாம் காயங்கள் உண்டாயின. முயல் வேகமாக ஓடி விரைவில் அவர்கள் கண்ணுக்குத் தெரியாமல் மறைந்து விட்டது. அவர்கள் அன்று பகல் முழுவதும் அதனைப் பிடிக்க ஓடி ஓடிக் களைத்துப் போயினர் ; மாலை வரையில் முயன்றும் அதனைப் பிடிக்க முடியாமையால் சலித்து ஊர் திரும்பினர்.

குருவும் மற்றச் சீடர்களும் அவர்களுக்கு வேண்டிய உபசாரங்களைச் செய்தனர். அவர்கள் களைப்பு நீங்கி, நடந்தவற்றைக் கூறி வருந்தினர். அதைக் கேட்ட குரு, ''இம்மாதிரிக் குதிரைக் குட்டி நமக்கு வேண்டாம். பிறந்தவுடனே இப்படி வேகமாக ஓடினுல் அது வளர்ந்து பெரியதான பிறகு எப்படி ஓடும்? கிழவனுகிய நான் அதன்மீது ஏறிச் சவாரி செய்ய முடியுமோ? அது ஓடிப் போனதே நல்லது,'' என்று கூறி அவர்களைத் தேற்றினுர்.

| | | |
|---|---|---|
| சீடர்கள் | ஐயத்தை | இடுக்குவழி |
| கறவைப்பசு | மட்டற்ற | பதுங்கியிருந்த |
| வெறுங்கையோடு | துணையாக | அதிர்ச்சி |
| குதிரை முட்டை | பணிவாக | களைத்து |
| சந்தேகப்பட்டு | பூசணிக்காய் | சலித்து |
| தேற்றினுர் | சாமர்த்தியத்தை | உபசாரங்கள் |

## கேள்விகள்

1. பரமார்த்த குருவின் சீடர்கள் யாவர் ?

2. பசுவைத் தேடப்போன மட்டி திரும்பி வந்து என்ன கூறினுன் ?

3. சீடர் குதிரை முட்டை வாங்கியது எவ்வாறு ?

4. சீடர் எதனைக் குதிரைக் குட்டி என்று எண்ணினர்? அவ்வாறு எண்ணியது ஏன்?

5. குதிரைக்குட்டி ஓடியதைக் கேட்டுக் குரு என்ன கூறினர்?

## பயிற்சி

1. இக்கதையை மவுனமாக வாசி.

2. பரமார்த்த குருவைப் பற்றிய மற்றக் கதைகளைப் படி.

3. இதைக் குரு சொல்வது போலச் சொல்.

4. இதை மட்டி சொல்வதாகச் சொல்.

5. பசு, ஊர், நாள், தலை, அழகு, உழைப்பு—இவற்றுள் ஒவ்வொன்றும் இன்ன பெயர் என்பதைக் கூறு.

6. முனிவர், மடையர், மக்கள், குதிரை, மரம், பொன், ஏரி—இவற்றிற்குத் திணை சொல்.

7. கீழே சில கேள்விகளும், அவற்றின் விடைகளும் தரப்பட்டுள்ளன. அவற்றைச் சேர்த்து ஒரே வாக்கியமாகச் சொல்.

கேள்விகள்:

(1) குரு நடந்தே பிரயாணம் செய்து வந்தார். ஏன்?

(2) குரு மட்டியை எதற்காக அனுப்பினர்?

(3) மட்டியும் மடையனும் ஏன் முயலைத் துரத்திக் கொண்டு ஓடினர்?

விடைகள்:

(1) குதிரை வாங்கப் பணம் இல்லாமையால்

(2) காணமற் போன பசுவைத் தேடி வருவதற்காக

(3) முட்டைக்குள்ளிருந்த குதிரைக்குட்டியே ஓடுகிறது என்று எண்ணியதால்




# 7. ஆறு

கல்லும் மலையும் குதித்து வந்தேன்—பெருங்
காடும் செடியும் கடந்து வந்தேன் ;
எல்லை விரிந்த சமவெளி எங்கும்—நான்
இறங்கித் தவழ்ந்து தவழ்ந்து வந்தேன். (1)

கட்டும் அணையேறிச் சாடி வந்தேன்—அதன்
கண்ணறை தோறும் நுழைந்து வந்தேன் ;
திட்டுத் திடர்களும் சுற்றி வந்தேன் ;—மடைச்
சீப்புகள் மோதித் திறந்து வந்தேன். (2)

காயும் நிலத்தழல் ஆற்றி வந்தேன்—அதில்
கண்குளி ரப்பயிர் கண்டு வந்தேன் ;
ஆயும் மலர்ப்பொழில் செய்து வந்தேன்—அங்கென்
ஆசை தீரவிளை யாடி வந்தேன். (3)

ஏருத மேடுகள் ஏறி வந்தேன்—பல
ஏரி குளங்கள் நிரப்பி வந்தேன் ;
ஊருத ஊற்றிலும் உட்புகுந்தேன்—மணல்
ஓடைகள் பொங்கிட ஓடி வந்தேன். (4)

பஞ்சை அரைத்துநூல் நூற்று வந்தேன்—சீனி
பாகமாய்ச் செய்து கொடுத்து வந்தேன் ;
நெஞ்சும் உலர்ந்த நெடுநகரில் குழாய்
நீராக வும்சென்று பாய்ந்து வந்தேன். (5)

மாங்கனி தேங்கனி வாரி வந்தேன்—நல்ல
வாச மலர்களும் அள்ளி வந்தேன் ;
நிற்க எனக்கினி நேரமில்லை—இன்னும்
நீண்ட வழிபோக வேண்டு மம்மா ! (6)

—தேசிக விநாயகம் பிள்ளை

பயிற்சி

1. ஆறு வந்த வழியைச் சொல்.
2. ஆறு செய்த அற்புதச் செயல்களைச் சொல்.
3. ஆற்ருல் உண்டாகும் பயன்களைச் சொல்.
4. இப்பாட்டைப் பாடிய ஆசிரியரைப் பற்றித் தெரிந்து கொள்.
5. இப்பாடலில் வந்துள்ள பெயர்ச் சொற்களை எடுத்து எழுதி ஒவ்வொன்றிற்கும் பால் குறி.
6. கோடிட்ட இடங்களைத் தக்க சொற்களால் பூர்த்தி செய்து வாசி :
7. முயன்ருன் - உயர்திணை. முயன்றது-அஃறிணை.
முயன்ருன் - ஆண்பால்
முயன்ருள் - பெண்பால்
முயன்றனர் - பலர்பால்
முயன்றது - ஒன்றன்பால்
முயன்றன - பலவின்பால்.

பெயர்ச்சொற்கள் போல வினைச்சொற்களுக்கும் திணை பால்கள் உண்டு.

6. கீழ்வரும் வாக்கியங்களில் ஒவ்வொன்றையும் இரண்டிரண்டாகப் பிரித்து எழுது.

(1) மட்டியும் மடையனும் புதர்களுக்குள் நுழைந்து ஓடியதனால் அவர்கள் உடம்பெல்லாம் காயங்கள் உண்டாயின.

(2) குடியானவன் ஐந்து பொன்னை வாங்கிக்கொண்டு பெரிய பூசணிக்காய் ஒன்றைப் பறித்துக் கொடுத்தான்.

7. திணைசொல்: முனிவர், பரதன், மலை, ஆறு, வீரர், புத்தர், குரு, முயல்.

8. இன்னபெயர் என்பதைச் சொல்: குதிரை, நாடு, மாதம், கிளை, வெண்மை, முயற்சி.

9. **அரசன், அரசி, சிறுவர், குதிரை, குதிரைகள்-**

இவற்றுள் அரசன் என்பது ஆணைக் குறிக்கிறது. இது **ஆண்பால்.**

அரசி என்பது பெண்ணைக் குறிக்கிறது. இது **பெண்பால்.**

சிறுவர் என்பது பலரைக் குறிக்கிறது. இது **பலர்பால்.**

குதிரை என்பது ஒன்றைக் குறிக்கிறது. இது **ஒன்றன்பால்.**

குதிரைகள் என்பது பலவற்றைக் குறிக்கிறது. இது **பலவின்பால்.**

ஆண்பால், பெண்பால், பலர்பால், ஒன்றன்பால், பலவின்பால் எனப் பால்கள் ஐந்து. இவற்றுள் ஆண்பால், பெண்பால், பலர்பால் மூன்றும் உயர்திணைக்கு உரியவை. ஒன்றன்பால், பலவின்பால் இரண்டும் அஃறிணைக்கு உரியவை.



# 8. ஆதி காலத்து மக்கள்

இக்காலத்தில் நாம் நாடுகளில் வசிக்கிறோம். நாடுகளில் கிராமங்களும் நகரங்களும் உள்ளன. கிராமங்களிலும் நகரங்களிலும் நாம் கூட்டமாகக் கூடி வாழ்கிறோம். ஓலை வீடுகளும், மாடி வீடுகளும் மாளிகைகளும் கட்டிக் கொண்டு அவற்றில் வசிக்கிறோம். பலவகை உணவுப் பொருள்களை உற்பத்தி செய்கிறோம். வெவ்வேறு சுவையுள்ள விதம் விதமான உணவுகளைச் சமைத்து உண்கிறோம்; பருத்தியினாலும் பட்டினாலும் பகட்டான ஆடைகளை நெய்து உடுக்கிறோம்; பொன்னினாலும் வெள்ளியினாலும் ஆபரணங்கள் செய்து அணிகிறோம்; உலோகங்களால் பாத்திரங்கள் செய்து உபயோகிக்கிறோம்;

இரும்பினுலும் எஃகினுலும் புதுப் புதுக் கருவிகளைச் செய்து பயன்படுத்துகிறோம். இவையெல்லாம் ஆதி காலத்தில் இருந்திருக்குமா ? ஆதி காலத்து மக்கள் எவ்வாறு வாழ்ந்திருப்பார்கள் ?

ஆதி காலத்து மக்கள் வாழ்க்கையைக் கூறினுல் நீங்கள் வியப்புக் கொள்வீர்கள். ஆதி காலத்தில் நாடு நகரங்கள் கிடையா ; எங்கும் காடாகவே இருந்தது. அக்காலத்து மக்கள் காடுகளிலேயே வசித்து வந்தார் கள். அவர்கள் கூட்டமாக ஓரிடத்தில் கூடி வாழாமல் தனித் தனிக் குடும்பமாகப் பிரிந்து வாழ்ந்தார்கள். அவர்களுக்கு நம்மைப் போல வீடு கட்டிக் கொள்ளத் தெரியாது. அவர்கள் மிருகங்களைப் போலவே வெயி லில் உலர்ந்தும், மழையில் நனைந்தும், காடுகளில் அலைந்து திரிந்தார்கள் ; இராக் காலங்களில் கொடிய மிருகங்களுக்கு அஞ்சி மலைக் குகைகளிலும் ; மரக் கிளைகளிலும் தங்கி வாழ்ந்தார்கள்.

அவர்கள் ஆடை நெய்யவும் ஆபரணங்கள் செய் யவும் அறியார்கள். அதனுல் அவர்கள் மரத் தழை களாலும் மரப்பட்டைகளாலுமே தங்கள் உடலை மறைத்து வந்தார்கள் ; பிறகு தாங்கள் வேட்டை யாடிக் கொல்லும் விலங்குகளின் தோலை ஆடையாக உடுக்கலானுர்கள். அவர்களுக்கு உணவுப் பொருள் களைப் பயிர் செய்யத் தெரியாது. உணவு சமைப்ப தும் அவர்கள் அறியாத ஒன்ருகும். அவர்கள் நெருப் பின் உபயோகத்தையே அறியாதவர்கள். ஆகவே அவர்கள் காய், கனி, கிழங்கு முதலியவைகளை அப் படியே உண்டார்கள் ; விலங்குகளை வேட்டையாடிக் கொன்று அவற்றின் இறைச்சியைப் பச்சையாகவே புசித்தார்கள்.

ஆதி காலத்தில் பொன், வெள்ளி, இரும்பு போன்ற உலோகங்கள் கண்டுபிடிக்கப் படவில்லை. அக்காலத்து மக்கள் புலிப் பல், புலி நகம், நரிப் பல், கிளிஞ்சல், பலகறை முதலியவற்றையே ஆபரண மாகக் கோத்து அணிந்து வந்தனர். உலர்ந்த காய் களின் ஓடுகளும், உட் குழிவாகக் குடையப்பட்ட மரக் குடுவைகளுமே அவர்கள் உபயோகித்த பாத்திரங்களாகும்.

தீங்கு இழைக்கும் கொடிய மிருகங்களிடமிருந்து தங்களைப் பாதுகாத்துக் கொள்வதும், தங்கள் உயிர் வாழ்க்கைக்கு வேண்டும் உணவைத் தேடிப் பெறுவ துமே ஆதி காலத்து மக்களின் முயற்சிகளாக இருந் தன. அவற்றிற்கு வேண்டும் கருவிகளைச் செய்து கொள்ளுவதே அவர்கள் அறிந்த முதல் தொழிலாகும். அவர்கள் முதலில் கற்களாலேயே அக்கருவிகளைச் செய்து கொண்டார்கள். விலங்குகளைக் குத்தவும், வெட்டவும், பிளக்கவும் வேண்டிய கத்தி, ஈட்டி, அம்பு, கோடரி முதலிய கருவிகளை அவர்கள் கற்களாலேயே செய்துகொள்ளக் கற்றனர். அது பற்றியே அவர்கள் வாழ்ந்த காலம் **கற்காலம்** என வழங்கலாயிற்று.

அவர்கள் அவ்வாறு கற்களை உபயோகித்து வரு கையில் அவை ஒன்றோடு ஒன்று தாக்கும் பொழுது நெருப்பு உண்டாவதைக் கண்டார்கள். அதிலிருந்து அவர்கள் கல்லைக் கடைந்து நெருப்பு உண்டாக்கிக் கொள்ளக் கற்றார்கள். பிறகு அவர்கள் காய் கிழங்கு களையும், மிருகங்களின் இறைச்சிகளையும் தீயில் வேக வைத்துப் புசிக்கத் தொடங்கினர். நெருப் பையும், அதன் உபயோகத்தையும் அறிந்தது முதல் அவர்கள் வாழ்க்கை விரைவாக முன்னேறலாயிற்று.

காய் கிழங்குகளையும் மாமிசங்களையும் உண்டு உயிர் வாழ்ந்து வந்தவர்கள் நிலத்தைக் கொத்தித் தானியங்களைப் பயிரிடும் முறையைக் கண்டனர். கூர்மையான மரக் கொம்புகளால் நிலத்தைக் கொத்தித் தங்களுக்கு வேண்டும் உணவுப் பொருள்களை விளைத்துக் கொண்டார்கள். நாளடைவில் மரத்தால் கலப்பை செய்து மாடுகளைப் பூட்டி நிலத்தை உழக் கற்றுக் கொண்டார்கள். அந்நிலையில் தனித் தனியாகப் பிரிந்து வாழ்ந்த அவர்கள் கூட்டமாகக் கூடி வாழ வேண்டிய அவசியம் ஏற்பட்டது. பலர் கூடி ஓர் இடத்தில் குடிசைகள் அமைத்துக் கொண்டு வாழத் தொடங்கினர். அவர்கள் தோலுக்குப் பதிலாகச் சிலவகை மரங்களின் நாரை உரித்துப் பின்னி உடுத்துக் கொண்டார்கள். உணவு சமைப்பதற்கும் உண்ணுவதற்கும் மண் பாண்டங்கள் செய்யவும் கற்றுக் கொண்டார்கள்.

அவர்கள் பிறகு பூமியை வெட்டி உலோகங்களைக் கண்டு பிடித்தார்கள். அவர்கள் முதன் முதலில் கண்டு பிடித்த உலோகம் இரும்பு ஆகும். இரும்பைக் கொண்டு அவர்கள் பல கருவிகளைச் செய்து பயன் படுத்திக் கொள்ளலானார்கள். பிறகு செம்பு, வெள்ளி, வெண்கலம் முதலிய உலோகங்கள் ஒவ்வொன்றாகக் கண்டு பிடிக்கப்பட்டன. அவர்கள் செங்கல்லும் ஓடும் செய்து அவற்றால் வீடுகள் கட்டிக்கொள்ளக் கற்றனர். பருத்திச் செடியைக் கண்டு, அதன் உபயோகத்தை அறிந்து, பஞ்சிலிருந்து நூல் நூற்று ஆடை நெய்து உடுக்கத் தொடங்கினர். உலோகங்களால் ஆபரணங்களும் பாத்திரங்களும் செய்து பயன்படுத்திக் கொள்ள முற்பட்டனர்.

ஆதியில் விலங்கு நிலையில் வாழத் தொடங்கிய மக்கள் இவ்வாறு சிறிது சிறிதாக முயன்று முன்னேறி இன்றுள்ள உயர் நிலையை அடைந்துள்ளார்கள். இந்த முயற்சிகளே **நாகரிகப் படிகள்** என்பவை. இந்நாகரிகப் படிகளைப் பற்றி நீங்கள் அறிந்து கொள்ள வேண்டுவது மிகவும் அவசியமாகும்.

| | | |
|---|---|---|
| நகரம் | ஆபரணம் | கடைந்து |
| பூட்டி | கூடி | புதுப்புது |
| தொடங்கு | உரித்து | மாடி |
| வியப்பு | முறை | பின்னி |
| மாளிகை | அலைந்து | கருவிகள் |
| பாண்டம் | பலவகை | விலங்கு |
| சிறிதுசிறிதாக | கூர்மை | நாளடைவில் |
| விதம்விதமான | புசி | அவசியம் |

## கேள்விகள்

1. ஆதிகாலத்து மக்கள் எப்படி வாழ்ந்து வந்தார்கள்?

2. அவர்கள் எப்படிப்பட்ட ஆபரணங்களை அணிந்திருந்தனர் ?

3. "கற்காலம்" என்று ஏன் பெயர் வந்தது ?

4. அவர்கள் கல்லைக் கடைந்து நெருப்பு உண்டாக்குவதை எவ்வாறு அறிந்தார்கள் ?

5. தனித்தனியாகப் பிரிந்து வாழ்ந்தவர்களுக்குக் கூடி வாழ வேண்டிய அவசியம் எப்பொழுது ஏற்பட்டது ?

6. எவை நாகரிகப் படிகள் எனப்படும் ?

## பயிற்சி

1. இப் பாடத்தை மவுனமாக வாசி.

2. விதம் விதமான, சிறிது சிறிதாக, புதுப்புது, நாளடைவில்—இவற்றை உன் சொந்த வாக்கியங்களில் வைத்து எழுது.

3. உணவு, ஆகாரம், இறைச்சி, மாமிசம், பாஷை, மொழி, ஜீவனம், வாழ்க்கை, விலங்கு, மிருகம்—இச் சொற்களில் ஒரே அர்த்தமுள்ள சொற்களை அறிந்து சொல்.

4. பெண்பால் கூறு: ஆண், சிறுவன், சகோதரன்.

5. கோடிட்ட இடங்களில் 'தெரியும்' 'தெரியாது' என்னும் சொற்களில் பொருத்தமானதை வைத்து வாசி:

(1) ஆதிகாலத்து மக்களுக்கு வீடு கட்டிக் கொண்டு வாழ ——

(2) நமக்கு உணவுப் பொருள்களைப் பயிர் செய்ய ——

(3) ஆதிகாலத்து மக்களுக்கு நெருப்பின் உபயோகம் ——

(4) இக்காலத்து மக்களுக்கு நெருப்பின் உபயோகம் ——

6. வீடு, வீடுகள்—

வீடு என்பது ஒன்றினைக் குறிக்கிறது. இது **ஒருமை எண்.**

வீடுகள் என்பது ஒன்றிற்கு மேற்பட்ட பலவற்றைக் குறிக்கிறது. இது **பன்மை எண்.**

**ஒருமை, பன்மை** என **எண்** இருவகைப்படும்.

1814—4



# 9. வேடனும் புறுவும்

ஒரு காட்டில் வேடன் ஒருவன் வாழ்ந்து வந்தான். அவன் கொலை செய்வதையே குலத்தொழிலாக உடைய கொடியவன். அவனைக் கண்டுவிட்டால் சிங்கம் புலி போன்ற கொடிய விலங்குகளும் அஞ்சி ஓடி ஒளிந்து கொள்ளும்; பறவைகள் குரல் அடங்கிக் கூடுகளில் பதுங்கிக் கொள்ளும். அவன் பகல் முழுதும் காட்டில் அலைந்து திரிந்து வேட்டையாடுவான்; கண்ணிற் பட்ட விலங்குகளையும் பறவைகளையும் கொன்று அவற்றின் இறைச்சியைத் தின்பான்; ஆற்று நீரைப் பருகி மரநிழலில் இளைப்பாறுவான்; இரவில் மலைக் குகையில் படுத்து உறங்குவான். அவன் இவ்வாறு கொலையையே வாழ்க்கையாகக் கொண்டு காலங் கழித்து வந்தான்.

அவன் ஒருநாள் வழக்கம்போல வில்லும், அம்பும், கூடும், கண்ணியும், குறுந்தடியும் ஆகிய கருவிகளை எடுத்துக்கொண்டு வேட்டைக்குப் புறப்பட்டான். அவன் முதலில் ஒரு மரத்தின் அடியில் கண்ணியைக் கட்டிவிட்டு, ஒரு புதரின் மறைவில் பதுங்கியிருந்தான். அப்பொழுது ஒரு பெண்புரு இரைதேடி அங்கு வந்தது. அது அறியாமல் கண்ணியில் அகப்பட்டுக்கொண்டது. வேடன் அதனைப் பிடித்துக் கூட்டில் அடைத்து எடுத்துக்கொண்டு, மேலும் விலங்கு பறவைகளைத் தேடிக் காட்டில் திரிந்துகொண்டிருந்தான். அப்பொழுது திடீரென்று கடுங்காற்றும் பெருமழையும் கலந்து எழுந்தன. வேடன் மழையில் நனைந்து காற்றால் கலங்கினான். அவன் உடல் குளிரால் நடுங்கியது. அவன் ஒரு மரத்தின் கீழ்ச்சென்று ஒடுங்கி நின்றான்.

வேடன் தங்கிய மரத்தின்மேல் ஓர் ஆண் புரு இருந்தது. இரை தேடச் சென்ற அதன் பெட்டை நெடுநேரம் ஆகியும் திரும்பி வாராமையால், 'காலையில் பிரிந்து சென்ற என் மனைவி இன்னும் திரும்பி வரவில்லை. அவளுக்கு என்ன நேர்ந்ததோ தெரியவில்லை. வேடர்கள் கையில் சிக்கிக் கொண்டாளோ! காற்று மழையில் அகப்பட்டு அவதிப்படுகிறாளோ! அவள் இல்லாத இவ்விடம் எனக்குப் பாழாக அன்றோ தோற்றுகிறது! நான் அவளை எங்குக் கண்டு தேடுவேன்! அவள் இல்லாமல் எப்படி உயிர்வாழ்வேன்!' என்று பலவாறு கூறி அழுது புலம்பியது.

வேடன் கூட்டில் இருந்த பெண் புரு ஆண் புருவின் புலம்பலைக் கேட்டு வருந்தியது. அது மரத்தின் மேல் இருந்த ஆண் புருவை நோக்கி, 'அன்பனே,

முன் பிறப்பில் பாவம் செய்தவர்கள் மறு பிறப்பில் அதன் பலனை அனுபவிக்கிறார்கள். நான் எனது பழைய வினையின் பயனாக இப்பொழுது இந்த வேடன் கூட்டில் அடைபட்டிருக்கிறேன். எந்தச் சமயத்தில் எது நேர வேண்டுமோ அது நேர்ந்தே தீரும். அதற்காக வருந்துவது அறியாமை ஆகும். இந்த வேடன் நம் வீட்டை நாடி வந்திருக்கிறான். இவன் இப்பொழுது குளிராலும் பசியாலும் மெலிந்திருக்கிறான். இவனை உபசரிக்க வேண்டியது நமது கடமை யாகும். என்னைப் பிடித்துக் கூட்டில் அடைத்திருக்கிறான் என்பதற்காக நீர் இவன் மீது பகைமை பாராட்டாமல், இவனுக்கு உம்மால் இயன்ற உதவியைச் செய்வீராக' என்று வேண்டிக் கொண்டது.

பெண் புருவின் அறிவுரையைக் கேட்டு ஆண் புரு மனம் தெளிந்தது. அது வேடனை நோக்கி, 'வேடரே, உம்மை வரவேற்கிறேன். நீர் இதை உமது வீடாகவே கருதி உமக்கு வேண்டுவதைக் கேளும்,' என்றது. வேடன், 'புருவே, முதலில் என் குளிரைப் போக்கு. அதுவே எனக்குப் பெரிய உபகாரம் ஆகும்' என்றான். உடனே ஆண் புரு உலர்ந்த சருகுகளையும் சுள்ளிகளையும் கொண்டு வந்து வேடன் முன் குவித்து, பிறகு காட்டிலிருந்து ஒரு கொள்ளி எடுத்துவந்து அதில் வைத்துத் தீ மூட்டியது. தீ மூண்டு எரியத் தொடங்கியது. ஆண் புரு வேடனை நோக்கி, 'இந்தத் தீயில் குளிர்காய்ந்து உமது உடல் நடுக்கத்தைப் போக்கிக் கொள்ளும். நான் முன் பிறப்பில் செய்த பாவத்தால் பறவையாகப் பிறந்திருக்கிறேன். அதனால் உமது பசியைப் போக்குவதற்கு ஏற்ற உணவுப் பொருள் ஏதும் என்னிடம் இல்லை.

என்னிடம் உள்ளது இந்த உடல் ஒன்றுமே ஆகும். இது பல துன்பங்களுக்கு இடமானது; பிறருக்குப் பயன்படாதது. இதனைப் பாதுகாத்து வைத்துக் கொண்டிருப்பதால் பயன் என்ன? பசியால் வருந் தும் உமக்கு இது பயன்படட்டும். நீர் இதனை உண்டு பசியைத் தீர்த்துக்கொள்ளும்' என்று கூறி, எரியும் நெருப்பில் மகிழ்ச்சியோடு விழுந்தது.

வேடன் ஆண் புருவின் செயலைக்கண்டு திகைப்பு அடைந்தான். இரக்கம் அறியாத அவன் இரும்பு உள்ளமும் இளகியது. "ஆ ஆ! இந்த அற்பப் புரு எனக்காகத் தன் உடலைத் துறந்தது. நான் கொலைத் தொழில் புரியும் கொடியவன்; உயிர்களைக் கொன்று தின்று உடல் வளர்ப்பவன்; இரக்கமும் உதவியும் அறியாத தீவினையாளன். ஆகவே நான் கொடிய நர கத்தில் வீழ்வேன். இந்தப் புருவின் செய்கையால் நான் இவ்வுண்மையை உணர்ந்தேன். இனி நான் உயிர்க்கொலை புரியேன். பசி, தாகம், குளிர், வெயில் இவற்றைப் பொறுத்து, பிறருக்கு உதவி செய்வதி லேயே காலம் கழிப்பேன்' என்று உறுதி கொண் டான். வில், அம்பு, கூடு, கண்ணி முதலிய வேட்டைக் கருவிகளை முறித்து எறிந்தான்; கூட்டைத் திறந்து பெண் புருவையும் விட்டு விட்டான்.

வெளிப்பட்ட பெண் புரு உயிர்வாழ விரும்ப வில்லை. அது வேடனைப் பார்த்து, 'என் அருமைக் கணவன் தருமத்திற்காகத் தன் உடலை விட்டான். கணவன் இறந்த பிறகு கற்புடைய பெண்களுக்கு வாழ்வு ஏது? என் கணவன் உடலோடு என் உடலை யும் சேர்த்து உண்டு பசி ஆறும்' என்று சொல்லிக் கொண்டே தீயில் விழுந்து இறந்தது. அடைந்தவனை

ஆதரித்த புண்ணியத்தால் அவ்விரு புருக்களும் தெய்வ வடிவம் பெற்றுத் தேவருலகம் அடைந்தன.

| | | |
|---|---|---|
| குலத்தொழில் | பாழாக | அறிவுரை |
| வேட்டை | பலவாறு | கொள்ளி |
| இறைச்சி | புலம்பியது | மூட்டியது |
| உறங்குவான் | முன்பிறப்பு | தீவினை |
| வில் | பாவம் | நரகம் |
| அம்பு | மறுபிறப்பு | முறிந்து |
| கண்ணி | பழையவினை | கற்பு |
| குறுந்தடி | பகைமை | ஆறும் |
| அவதி | இயன்ற | புண்ணியம் |

## கேள்விகள்

1. மழையாலும் குளிராலும் வருந்திய வேடன் என்ன செய்தான்?
2. மரத்தின் மீது இருந்த ஆண் புரு என்ன சொல்லி வருந்தியது?
3. பெண் புரு ஆண் புருவை என்ன செய்யுமாறு வேண்டியது?
4. பெண் புருவினால் அறிவு தெளிந்த ஆண் புரு செய்தது என்ன?
5. ஆண் புருவினது செயலைக் கண்ட வேடன் உணர்ந்தது என்ன? அவன் செய்தது என்ன?
6. விடுபட்ட பெண் புரு என்ன செய்தது?
7. இக்கதையால் நீ அறிவது என்ன?

## பயிற்சி

1. இக்கதையை மவுனமாக வாசி.
2. இக்கதை எதில் உள்ளது என்பதைத் தெரிந்து கொள்.

3. அதிலுள்ள மற்றக் கதைகளையும் மவுனமாக வாசி.

4. எதிர்ச்சொல் கூறு: பாவம், தீவினை, பிறப்பு, உபகாரம்.

5. ஒருமை கூறு: பறவைகள், கருவிகள், விலங்குகள், வேடர்கள்.

6. பன்மை கூறு: காடு, சிங்கம், மரம், புரு, கூடு, கணவன், வடிவம்.

7. சொல்லியுள்ளவாறு செய்:

(1) பெண்புரு உயிர் வாழ விரும்பவில்லை.—இதை விரும்பவில்லை என்பதற்குப் பதிலாக விரும்பியது என்பதை அமைத்து வாசி.

(2) நெருப்பையும், அதன் உபயோகத்தையும் அறிந்தது முதல் அவர்கள் வாழ்க்கை விரைவாக முன்னேறியது—இதை முன்னேறியது என்பதற்குப் பதிலாக முன்னேறவில்லை என்பதை அமைத்து வாசி.

8. இவற்றைக் கவனித்துப் படி:

| திணை | பால் | எண் |
|---|---|---|
| உயர்திணை | ஆண்பால் | ஒருமை |
| | பெண்பால் | ஒருமை |
| | பலர்பால் | —பன்மை |
| அஃறிணை | ஒன்றன்பால் | —ஒருமை |
| | பலவின்பால் | —பன்மை |




# 10. இரயில் பிரயாணம்

**நம்பி :** அப்பா, நான் இதுவரையில் இரயிலில் பிரயாணம் செய்ததே இல்லை. இப்பொழுது எனக்கு விடுமுறை நாளாகவும் இருக்கிறது. என்னை எங்கே யாவது இரயிலில் அழைத்துப் போகிறீர்களா ?

**நங்கை :** அப்பா, எனக்கும் இரயிலில் பிரயாணம் செய்யவேண்டும் என்று ஆசையாய் இருக்கிறது. அண்ணாவோடு என்னையும் அழைத்துப் போங்கள், அப்பா.

**தந்தை :** நான் இன்று காஞ்சிபுரம் போகப் போகிறேன். உங்களையும் அழைத்துப் போகிறேன். உங்களுக்கு வேண்டிய உடை, படுக்கை முதலியவைகளை எடுத்துக் கட்டிக்கொண்டு புறப்படுங்கள். இன்னும் ஒருமணி நேரத்தில் புறப்பட வேண்டும்.

**நம்பி :** எல்லாவற்றையும் எடுத்துக் கொண்டோம். புறப்படலாமா அப்பா ?

**தந்தை :** அதோ, வண்டி வந்துவிட்டது. மூட்டைகளைக் கொண்டுபோய் அதில் வைத்து விட்டு நீங்களும் ஏறிக் கொள்ளுங்கள். ஸ்டேஷனுக்குப் போவோம்.

**நங்கை :** அதோ தெரிகிறதே, அதுதானே அப்பா இரயில் ஸ்டேஷன் ?

**நம்பி :** அங்கு எத்தனை வண்டிகள் நிற்கின்றன பாருங்கள், அப்பா ?

**தந்தை :** இறங்குங்கள், ஸ்டேஷனுக்கு வந்து விட்டோம். அந்த ஆளைக் கூப்பிடுங்கள். மூட்டைகளை அவனிடம் கொடுப்போம்.

**நங்கை :** அவன் யார் அப்பா ? மூட்டைகளை ஏன் அவனிடம் கொடுக்க வேண்டும் ?

**தந்தை :** அவன் ஸ்டேஷன் கூலியாள். அவனுக்குப் **போர்ட்டர்** என்பது பெயர். அவனிடம் மூட்டையைக் கொடுத்தால் அவன் அதை இரயிலில் கொண்டு வந்து வைப்பான்.

**நம்பி :** அவனுக்குக் கூலி கொடுக்க வேண்டுமா அப்பா ?

**தந்தை :** கூலி வாங்காமல் வேலை செய்வானா ? ஆனால் அவன் மற்றக் கூலியாள்களைப் போலத் தன் இஷ்டப்படி கூலி கேட்க முடியாது. ஒரு மணங்கு எடையுள்ள மூட்டைக்கு நான்கணா கூலி என்று இரயில் அதிகாரிகளே திட்டம் செய்திருக்கிறார்கள். அதற்கு அதிகமாக அவன் கேட்க முடியாது.

**நங்கை :** இவன் இரயில் போர்ட்டர் என்பது எப்படித் தெரியும் ?

**தந்தை :** இவன் கையில் ஒரு பித்தளைத் தகடு கட்டிக் கொண்டிருக்கிறான் பார். அதுதான் இவன் இரயில் போர்ட்டர் என்பதற்கு அடையாளம். அதில் இவனுக்குரிய எண் பதித்திருக்கிறது. மற்றக் கூலிகளைப் போல இவன் மூட்டையைத் திருடிக் கொண்டு மறைந்துவிட முடியாது. மறைந்து விட்டாலும் இவன் எண்ணைச் சொல்லி அதிகாரிகளிடம் புகார் செய்தால், அவர்கள் இவனைப் பிடித்து விடுவார்கள்.

**நங்கை :** இது நல்ல ஏற்பாடு அப்பா. அங்கு ஏன் அவர்கள் வரிசையாக நிற்கிறார்கள்?

**தந்தை :** அது டிக்கெட் கொடுக்கும் இடம்; மேலே எழுதியிருக்கிறது பார். டிக்கெட் வாங்குவதற்காக அவர்கள் அங்கு வரிசையாக நிற்கிறார்கள். கூட்டமாகக் கூடி ஒருவர்மேல் ஒருவர் விழுந்து நெருக்கினால் டிக்கெட் வங்குவது கஷ்டம். டிக்கெட் கொடுப்பவரும் சிரமப்படுவார். இப்படி வரிசையாக நின்று ஒவ்வொருவராக வாங்குவதால் வந்த வரிசை முறைப்படி எல்லோரும் எளிதில் வாங்கிக்கொள்ள முடியும். நாம் எல்லாப் பொது இடங்களிலுமே இப்படி நடந்துகொள்ள வேண்டும். நம்பி, நீ வரிசையில் நின்று காஞ்சிபுரத்திற்கு இரண்டு டிக்கெட்டுகள் வாங்கிக்கொண்டு வா.

**நம்பி :** இரண்டு டிக்கெட்டுகளா? நாம் மூன்று பேர்கள் அல்லவோ இருக்கிறோம்?

**தந்தை :** எனக்கு ஒரு டிக்கெட். நீங்கள் பனிரண்டு வயதுக்கு உட்பட்டவர்கள் அல்லவா? உங்கள் இருவருக்கும் சேர்ந்து ஒரு டிக்கெட்டுதான்.

**நங்கை :** பனிரண்டு வயதுக்கு உட்பட்டவர்களுக்கு அரை டிக்கெட்டா அப்பா?

**தந்தை :** ஆம். இருங்கள். இந்தச் சாமானை நிறுத்துக்கொண்டு போவோம்.

**நம்பி :** சாமானை ஏன் அப்பா நிறுக்க வேண்டும்?

**தந்தை :** ஒரு டிக்கெட்டுக்கு 25 சேர் நிறையுள்ள சாமான்தான் கட்டணம் இல்லாமல் கொண்டு போகலாம். அதற்கு அதிகமாக இருந்தால், அதிகமுள்ள நிறைக்குக் கட்டணம் செலுத்தவேண்டும்.

**நங்கை :** அப்படியானுல் நாம் ஐம்பது சேர் நிறையுள்ள சாமான்வரையில் கட்டணம் இல்லாமல் கொண்டு போகலாம் அல்லவா ?

**தந்தை :** நல்லவேளை ! நம் சாமான் நாற்பது சேர் நிறைதான் உள்ளது. போர்ட்டர், சாமானை எடுத்துக் கொண்டு வா.

**நம்பி :** அப்பா, இவர் யார் ? இவர் ஏன் நம் டிக்கெட்டை வாங்கிக் கத்தரித்துத் தருகிருர் ?

**தந்தை :** இவர் டிக்கெட் பரிசோதகர். டிக்கெட் இல்லாதவர்கள் உள்ளே வரக்கூடாது. அதற்காக நம் டிக்கெட்டைப் பார்த்து, பார்த்ததற்கு அடையாளமாக அதைக் கத்தரித்துக் கொடுக்கிருர்.

**நங்கை :** இது என்ன அப்பா, மேடைமாதிரி இருக்கிறது ?

**தந்தை :** இதுதான் ஸ்டேஷன் மேடை. இதற்குப் **பிளாட்பாரம்** என்பது பெயர்.

**நம்பி :** எவ்வளவு கூட்டம் அப்பா ! இத்தனைப் பேர்களும் இந்த இரயிலில் பிரயாணம் செய்யப் போகிறவர்களா ?

**தந்தை :** இரயிலில் பிரயாணம் செய்யப் போகிறவர்களும் இருக்கிறார்கள். அவர்களை வழியனுப்ப வந்தவர்களும் இருக்கிறார்கள்.

**நங்கை :** வழியனுப்ப வந்தவர்கள் டிக்கெட் இல்லாமல் எப்படி உள்ளே வந்தார்கள்? டிக்கெட் பரிசோதகர் இவர்களை எப்படி விட்டார் ?

**தந்தை :** அவர்கள் பிளாட்பாரம் டிக்கெட் வாங்கிக்கொண்டு வந்திருப்பார்கள். ஓர் அணுக் கொடுத்தால் பிளாட்பாரம் டிக்கெட் கொடுப்பார்கள். அதை வாங்கிக்கொண்டால் பிளாட்பாரத்திற்குள் வரலாம்.

**நங்கை :** அதோ மணி அடிக்கிறது ! வண்டி வருகிறதா அப்பா ?

**தந்தை :** இல்லை. வண்டி முன் ஸ்டேஷனை விட்டுப் புறப்பட்டு விட்டது என்பதை அறிவிக்க மணி அடிக்கிறது. இன்னும் கால் மணி நேரத்தில் வண்டி இங்கு வந்துவிடும்.

**நம்பி :** இந்தப் பிளாட்பாரத்தைப் பாருங்கள் அப்பா ! குப்பையை எறிந்தும், எச்சிலைத் துப்பியும் எப்படி அசுத்தம் செய்திருக்கிறார்கள் ! அதோ ஒருவர் உட்கார்ந்திருக்கும் இடத்திலேயே எச்சில் துப்புகிறார் பாருங்கள்.

**தந்தை :** என்ன செய்வது ? இன்னும் நம் மக்களுக்குப் பொது இடங்களில் எப்படி நடந்து கொள்ளவேண்டும் என்பது தெரியவில்லை. அதோ 'அசுத்தம் செய்யக்கூடாது' 'எச்சில் துப்பக் கூடாது' என்று போர்டுகூடப் போட்டிருக்கிறார்கள். எச்சில் துப்புவதற்கென்று தொட்டிகளும் வைத்திருக்கிறார்கள். பொது மக்கள் ஒழுங்காக நடந்துகொண்டால்தானே !

**நங்கை :** பழம், பணிகாரம், காப்பி இவைகளை விற்பவர்கள் ஏன் இங்கு இருக்கிறார்கள் ?

**தந்தை :** பிரயாணிகளுக்கு விற்பதற்காகவே இருக்கிறார்கள். இரயில் வந்து நின்றதும் இவர்கள் கூவிக்கொண்டே இங்கும் அங்கும் போவார்கள்.

**நம்பி :** அதோ இரயில் வருகிறது அப்பா !

**தந்தை :** ஆம். அதுதான் நாம் ஏறிச் செல்ல வேண்டிய இரயில். நீங்கள் ஓரத்தில் நிற்காதீர்கள் ; ஒதுங்கி நில்லுங்கள். அவசரப்படாதீர்கள். வண்டி நிற்கட்டும். முதலில் இறங்குபவர்களுக்கு வழிவிட்டு, அவர்கள் இறங்கியான பிறகு நாம் ஏறிக்கொள்ளலாம்.

**நங்கை :** நான் ஜன்னல் பக்கத்தில் உட்காருகிறேன் அப்பா.

**தந்தை :** உட்கார். ஆனால் முகத்தை வெளியில் நீட்டாதே. கரித்தூள் பறந்து வந்து கண்ணில் விழும். ஜன்னல் கதவு நன்றாகப் பொருந்தியிருக்கிறதா பார்.

**நம்பி :** அப்பா, மணி அடிக்கிறதே! வண்டி புறப்பட்டுவிடுமா ?

**தந்தை :** இது முதல் மணி. வண்டி புறப்பட இன்னும் ஐந்து நிமிஷங்கள் இருக்கின்றன. ஐந்து நிமிஷங்கள் கழிந்ததும் இரண்டாவது மணி அடிக்கும். கார்டு பச்சைக் கொடியைக் காட்டி, ஊது குழலை ஊதுவார். அதற்குப் பிறகே வண்டி புறப்படும்.

**நங்கை :** கார்டு யார் அப்பா ?

**தந்தை :** அதோ கையில் கொடியும் வாயில் குழலும் வைத்துக்கொண்டு நிற்கிறார் பார். அவர்தான்

கார்டு. இரயிலைப் பாதுகாத்துச் செலுத்துபவர் கார்டு எனப்படுவார். அவர் வண்டியிலேயே வருவார். அவர் உத்தரவுப்படியே டிரைவர் இரயிலைச் செலுத்த வேண்டும்.

**நம்பி :** அவர் பக்கத்தில் ஒருவர் நிற்கிறாரே, அவர் யார்? அவரும் கையில் கொடி வைத்துக்கொண்டிருக்கிறாரே!

**தந்தை :** அவர் ஸ்டேஷன் மாஸ்டர். அவர் தான் ஸ்டேஷனுக்குத் தலைவர். அவர் உத்தரவு கொடுத்தால்தான் இரயில் ஸ்டேஷனை விட்டுப் புறப் படலாம்.

**நங்கை :** அவர்கள் சிவப்புக் கொடியும் வைத்திருக்கிறார்களே, ஏன் அப்பா?

**தந்தை :** இரயிலை நிறுத்த வேண்டுமானால் சிவப்புக் கொடியைக் காட்டுவார்கள்.

**நம்பி :** இரண்டாவது மணி அடிக்கிறது அப்பா!

**நங்கை :** அதோ கார்டு பச்சைக் கொடியைக் காட்டி ஊதுகுழலை ஒலிக்கின்றார் அப்பா!

**தந்தை :** ஆம், வண்டி புறப்பட்டு விட்டது.

**நம்பி :** பிரயாணம் செய்யும் வண்டியில் எப்படி அசுத்தம் செய்திருக்கிறார்கள் பாருங்கள், அப்பா! இதில் அவர்களும்தானே பிரயாணம் செய்கிறார்கள்?

**தந்தை :** நம்நாட்டு மக்களில் பெரும்பாலோர்க்குக் கல்வியறிவு இல்லை. இவையெல்லாம் அதன் விளைவுகளே ஆகும். மக்கள் அனைவரும் போதுமான கல்வியறிவு பெற்றாலொழிய இச் சீர்கேடுகளைத் தடை செய்ய முடியாது.

**நங்கை :** அதோ பாருங்கள் அப்பா, பலர் இடம் இல்லாமல் நின்றுகொண்டிருக்க, ஒருவர் நீட்டிப் படுத்துக்கொண்டிருக்கிறார் !

**தந்தை :** ஐயா, பெண்களும் சிறுவர்களுமாகப் பலர் நிற்கும்பொழுது நீர் படுத்திருப்பது நியாயமா ? எழுந்து உட்கார்ந்து நிற்பவர்களுக்கு இடம் கொடுங்கள்.

**நம்பி :** இரயில் வண்டியை யார் அப்பா கண்டு பிடித்தார் ?

**தந்தை :** ஜேம்ஸ் வாட் என்னும் ஆங்கிலேயர் நீராவியின் சக்தியைக் கண்டுபிடித்தார். அவருக்குப் பிறகு ஜார்ஜ் ஸ்டீவன்ஸன் என்பவர் நீராவியின் சக்தியால் ஓடும் இரயில் இயந்திரத்தைச் செய்து இருப்புப் பாதையின்மேல் ஓடச் செய்தார். பிறகு அது எல்லா நாடுகளிலும் பரவியது.

**நங்கை :** நாம் எப்பொழுது காஞ்சிபுரம் போய்ச் சேருவோம் ?

**தந்தை :** மாலையில் போய்ச் சேருவோம்.

**நங்கை :** அங்கு நாம் எங்கே தங்குவது ?

**தந்தை :** அங்குப் பல சத்திரங்கள் உள்ளன. ஏதாவது ஒரு சத்திரத்தில் தங்கலாம்.

**நம்பி :** அப்பா, நான் காஞ்சிபுரத்தைப் பற்றி என் பாடப் புத்தகத்தில் படித்தேன். அது மிகவும் பழமையான நகரமாம். பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னமே அது சிறந்த நகரமாக விளங்கியதாம். கரிகால் வளவன் என்னும் சோழன் அந்நகரத்தைப் புதுப்பித்தானும். பல்லவச் சக்கரவர்த்திகளுக்கு அது தலைநகரமாக இருந்ததாம். அது கோவில்கள் நிறைந்த

நகரமாம். அங்கு ஏகாம்பரநாதர் கோவில், காமாட்சி அம்மன் கோவில், வரதராஜப் பெருமாள் கோவில் முதலிய பெரிய கோவில்கள் இருக்கின்றனவாம். இராஜ வீதி, தேரோடும் வீதி எல்லாம் உள்ளனவாம். அவற்றையெல்லாம் எங்களுக்குக் காட்டுகிறீர்களா, அப்பா?

**தந்தை:** அதற்காகத்தானே உங்களை அழைத்துப் போகிறேன்.

| | | |
|---|---|---|
| **விடுமுறை** | **திட்டம்** | **கார்டு** |
| **சக்தி** | **ஸ்டேஷன்** | **ஏற்பாடு** |
| **உத்தரவு** | **இருப்புப் பாதை** | **கூலியாள்** |
| **டிக்கெட்** | **ஸ்டேஷன் மாஸ்டர்** | **சத்திரங்கள்** |
| **போர்ட்டர்** | **முறைப்படி** | **போதுமான** |
| **இஷ்டப்படி** | **பரிசோதகர்** | **கல்வியறிவு** |
| **பிளாட்பாரம்** | **அசுத்தம்** | **நீராவி** |

**பயிற்சி**

**1. உங்கள் ஊருக்கு அருகிலுள்ள இரயில் ஸ்டேஷனைச் சொல்.**

**2. இரயில் ஸ்டேஷனுக்குச் சென்று பார்.**

**3. போர்ட்டர், கார்டு, ஸ்டேஷன் மாஸ்டர் ஆகியோர் வேலைகளைக் கவனி.**

**4. இரயில் வருவதையும் புறப்படுவதையும் கவனி.**

**5. போர்ட்டர்—இது ஆங்கிலச் சொல். இப்பாடத்தில் வந்துள்ள ஆங்கிலச் சொற்களைக் குறித்துக் கொள்.**

**6. அவற்றிற்குத் தமிழ்ச் சொற்கள் தெரிந்து கொள்.**

**7. இஷ்டப்படி, ஏற்பாடு, முறைப்படி, போதுமான— இவற்றை உன் சொந்த வாக்கியங்களில் வைத்து எழுது.**

8. பிரித்து எழுது: தேவருலகம், மரநிழல், கல்வியறிவு, தேரோடும்.

9. **கண்ணிற்பட்ட பறவைகளையும் விலங்குகளையும் கொன்று தின்பான்.**

இவ்வாக்கியத்தில் **தின்பான், பட்ட, கொன்று** என்பன வினையை (செயலை)க் குறிக்கின்றன. இவை **வினைச் சொற்கள்.** இவற்றுள் **தின்பான்** என்னும் வினைச்சொல் பொருள் முடிந்து நிற்கிறது. இது **முற்று வினை.** இது **வினை முற்று** எனப்படும்.

**பட்ட** என்பதும், **கொன்று** என்பதும் பொருள் முடியாமல் நிற்கின்றன. இவை **எச்ச வினைகள்.** இவற்றுள் **பட்ட** என்னும் எச்ச வினை **பறவைகள்** என்னும் பெயர்ச் சொல்லைக் கொண்டு பொருள் முடிகிறது. ஆகவே இது **பெயரெச்சம்.**

**கொன்று** என்னும் எச்ச வினை **தின்பான்** என்னும் வினைச் சொல்லைக் கொண்டு பொருள் முடிகிறது. ஆகவே இது வினையெச்சம்.

10. (1) குரு மட்டியை அனுப்பினர்.

(2) குதிரையின் விலை என்ன?

(3) மாநில மீது அதுபோல் பிறிதில்லையே!

1. முதல் வாக்கியம் ஒரு முழுக் கருத்தைத் தெரிவிக்கிறது. இது போன்ற வாக்கியங்களின் முடிவில் முற்றுப் புள்ளி (.) இட்டு எழுதவேண்டும்.

2. இரண்டாவது வாக்கியம் கேள்வி கேட்கிறது. இது போன்ற கேள்வி வாக்கியங்களின் கடைசியில் கேள்விக் குறி (?) இட்டு எழுதவேண்டும்.

3. மூன்ருவது வியப்பு உணர்ச்சியைக் காட்டுகிறது. இது போல உணர்ச்சியைத் தெரிவிக்கும் வாக்கியங்களின் இறுதியில் உணர்ச்சிக் குறி (!) இட்டு எழுதவேண்டும்.

1814—5



# 11. கம்பர்

நம் நாட்டு இதிகாசங்கள் இரண்டு. ஒன்று இராமாயணம் ; மற்றொன்று மகாபாரதம். இராமா யணம் இராம இலக்குமணர்களின் வரலாற்றைக் கூறுவது. இதனை முதன் முதலில் வால்மீகி என்னும் முனிவர் வடமொழியில் எழுதினர். இதனைத் தமிழில் முதன் முதலாக எழுதி உதவியவர் கம்பர்.

வால்மீகியால் இயற்றப்பட்டது வால்மீகி இராமா யணம். கம்பரால் இயற்றப்பட்டது கம்பராமாயணம். சொற்சுவை பொருட்சுவை ஆகியவற்றில் கம்பராமா யணம் மிகச்சிறந்து விளங்கும் ஒரு காவியமாகும்.

இதனைப் போற்றாத புலவரில்லை. இதனாலேயே 'கம்பன் பிறந்த தமிழ் நாடு' என்று நம் நாட்டைப் போற்றுகின்றார் பாரதியார்.

கம்பர் சோழ நாட்டில் திருவழுந்தூர் என்னும் ஊரில் பிறந்தார். இவர் இளமையிலேயே தம் பெற்றோரை இழந்து வறுமையால் வாடினார். இவர் தக்கோர் உதவியால் திருவெண்ணெய் நல்லூர் என்னும் ஊரை அடைந்தார்; அங்குச் சடையப்ப வள்ளலின் வள்ளல் தன்மையைக் கேள்வியுற்று அவரை யடைந்து, தம்மை ஆதரிக்க வேண்டினார். சடையப்பரும் கம்பரைத் தம் மகனுக்குத் தூக்குத் தூக்கியாக நியமித்து அவரை ஆதரித்து வந்தார்.

கம்பர் சடையப்ப வள்ளலின் புதல்வனோடு பள்ளிக்குச் சென்று வரலானார். கம்பரும் கல்வி கேள்விகளில் சிறப்புற்று விளங்கினார். இதனை யுணர்ந்த சடையப்ப வள்ளல் அவருக்கும் கல்வி யூட்டத் தக்க ஏற்பாடுகளைச் செய்தார். கம்பர் சிறந்த இலக்கண இலக்கியங்களைக் கற்றுக் 'கல்வியில் பெரியவர் கம்பர்' என்று எல்லோரும் புகழுமாறு விளங்கினார். இரண்டாம் குலோத்துங்கன் என்னும் சோழ மன்னன் கம்பரது புலமையைக் கேள்வியுற்று, அவரை யழைத்துத் தம்மிடம் ஆஸ்தானப் புலவராக அமர்த்திக் கொண்டான். கம்பரது புகழ் எங்கும் பரவிற்று. எல்லோரும் கம்பரது புலமையைப் பலவாறு போற்றிப் புகழலாயினர்.

இங்ஙனம் இருக்கும் நாளில் கம்பரை வடமொழி இராமாயணக் கதையைத் தமிழில் இயற்ற வேண்டுமென்று குலோத்துங்க மன்னன் வேண்டினன். இவ் வேண்டுகோளுக்கு உறுதுணையாக இருந்தவர்

சடையப்ப வள்ளலாவர். சடையப்ப வள்ளலின் சொல்லை மறுக்க அஞ்சிய கம்பர் தேனினு மினிய செந்தமிழ்ப் பாக்களால் இராம காதையைச் செவ்வனே இயற்றி முடித்தார்.

முற்காலத்தில் நூல் இயற்றியவர் அந் நூலை அரங்கேற்ற வேண்டும். அரங்கேற்றினலன்றி அந் நூலைப் புலவர்கள் ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். அரங்கேற்றுதலாவது, கற்று வல்ல புலவர்கள் கூடிய அவையில் நூலின் ஆசிரியர் தம் நூலைப் படித்துக் காட்டி, அவர்கள் கேட்கும் கேள்விகளுக்கு விடை கூறி, நூலினை ஒப்புக்கொள்ளுமாறு செய்தல் ஆகும். இதற்குப் பின்னரே அந் நூல் புலவர்களால் ஏற்றுக் கொள்ளப்படும். புலவர்கள் ஏற்றுக்கொண்ட நூலையே பொது மக்களும் போற்றிப் படிப்பர்.

கம்பரும் தம் நூலை அரங்கேற்ற விரும்பினர். ஒரு நல்ல நாளில் திருவரங்கத்தில் கம்பர் தம் நூலைக் கற்று வல்ல புலவர் அவையில் அரங்கேற்றினர். நூலின் சுவையை அறிஞர் சுவைத்து அகமகிழ்ந் தனர் ; கம்பரைக் 'கவிச் சக்கரவர்த்தி' என்று புகழ்ந்தனர்.

கம்பர் செய் நன்றி மறவாதவர். இவர் தம்மை ஆதரித்த சடையப்ப வள்ளலுக்குக் கைம்மாறு செய்யக் கருதினர்; தாம் இயற்றிய இராமாயணத்துள் தம்மை ஆதரித்த வள்ளலைப் பல விடங்களில் பாராட் டிப் புகழ்ந்தார். சடையப்பர் ஊனுடல் அழிந்தது. ஆயினும் அவரது புகழுடல் அழியவில்லை. கம்பரது இராமாயணம் இவ் வுலகில் உள்ள அளவும் சடை யப்பர் புகழ் நிலைத்து நிற்கும் என்பதில் ஐயமில்லை.

கம்பராமாயணம் இன்று உலக காவியங்களில்

ஒன்ருகப் போற்றப்படுகிறது. கம்பன் உலகப் பெருங் கவிஞருள் ஒருவனுகப் பாராட்டப்படுகிருன். " யாம் அறிந்த புலவரிலே **கம்பனைப்** போல் வள்ளுவன் போல் இளங்கோவைப் போல், பூமிதனில் யாங் கணுமே பிறந்ததில்லை ; உண்மை வெறும் புகழ்ச்சி யில்லை " என்று பாரதியார் கம்பன் பெருமையைப் பாடியுள்ளார். தன் கவிதையால் தாய் நாட்டிற்கு உலகப் புகழ் அளித்த பெரியவன் கம்பன். அவன் கவிகளைப் போற்றிப் படித்து, அப்புகழை நிலை நிறுத்த வேண்டுவது நமது கடமையாகும்.

| | | |
|---|---|---|
| இதிகாசங்கள் | காவியம் | ஆஸ்தானப் புலவர் |
| செய்நன்றி | இராமாயணம் | வறுமை |
| வேண்டுகோள் | கைம்மாறு | மகாபாரதம் |
| வள்ளல் தன்மை | பாக்கள் | ஊனுடல் |
| வடமொழி | தூக்குத் தூக்கி | செவ்வனே |
| புகழுடல் | சொற்சுவை | இலக்கணம் |
| அரங்கேற்றி | கவிதை | பொருட்சுவை |
| இலக்கியம் | அவையில் | உறுதுணை |
| புலமை | நல்ல நாளில் | கவிச் சக்கரவர்த்தி |

### கேள்விகள்

1. பாரதியார் தமிழ் நாட்டை எவ்வாறு போற்று கின்ருர் ?
2. கம்பர் பிறப்பு வளர்ப்பு வரலாறு யாது ?
3. கம்பர் கல்வி கற்றது எவ்வாறு ?
4. கம்பர் இராமாயணம் இயற்றிய காரணம் யாது ?
5. கம்பர் இராமாயணத்தை எங்கு அரங்கேற்றினர் ?
6. கம்பரின் செய்ந்நன்றி மறவாமை எவ்வாறு தெரிகிறது ?
7. கம்பர் சிறப்பு யாது ?

## பயிற்சி

1. திருவழுந்தூர் உள்ள இடத்தைத் தெரிந்து கொள்.

2. திருவள்ளுவர், இளங்கோவடிகள் போன்ற புலவர்களுடைய வரலாறுகளையும் படித்துத் தெரிந்து கொள்.

3. கம்பர் காலத்திலிருந்த வேறு புலவர்கள் சிலர் பெயர்களைத் தெரிந்து கொள்.

4. கம்பர் இயற்றிய வேறு நூல்களைக் கேட்டுத் தெரிந்து கொள்.

5. சொற்சுவை, பொருட்சுவை, நல்ல நாளில், வேண்டுகோள், செய்ந் நன்றி, கைம்மாறு—இவற்றை உன் சொந்த வாக்கியங்களில் வைத்து எழுது.

6. பிரித்து எழுது: சொற்சுவை, பொருட்சுவை, கம்பராமாயணம், அரங்கேற்ற, ஊனுடல்.

7. எழுவாய் பயனிலை செயபடுப்பொருள்கள் கூறு:

அறிஞர் கம்பரைப் புகழ்ந்தனர்.
வேடன் கருவிகளை முறித்து எறிந்தான்.
சடையப்பர் கம்பனை ஆதரித்தனர்.

8. கோடிட்ட இடங்களில் பொருத்தமான சொற்களைச் சேர்த்து வாசி.

இரயிலைப் பாதுகாத்துச் செலுத்துபவர் ——— எனப்படுவார்.
இரயிலை நிறுத்த வேண்டுமானல் —— காட்டுவர்.
ஜேம்ஸ் வாட் என்பவர் —— கண்டுபிடித்தார்.
——— நீராவியால் ஓடும் இயந்திரத்தைச் செய்து இரயிலை ஓடச் செய்தார்.
காஞ்சிபுரம் —— தலைநகரமாக இருந்தது.
கம்பனை —— ஆதரித்தார்.

9. சடையப்பர் ஊனுடல் அழிந்தது — உடன்பாடு.

| | | |
|---|---|---|
| புகழுடல் | அழியவில்லை | — எதிர் மறை. |
| போற்றிப் | படிப்பர் | — உடன்பாடு. |
| போற்றிப் | படியார் | — எதிர் மறை. |



## 12. சிங்கமும் முயலும்

குறு முயல் சிங்கந் தன்னைக்
        கொன்றதொன் றுண்டே தென்னில்
செறியு மோர் காட்டி லேயோர்
        சிங்க முண் டந்தக் காட்டில்
உறு விலங் கனைத்தும் வேட்டை
        யாடி ஊன் மிகவும் தின்று
வெறி கொடு திரியும் நாளில்
        விலங் கெலாம் ஒருங்கு கூடி. (1)

'ஆண்இளஞ் சிங்க மே ! உன்
        அடவியில் விலங்கை யெல்லாம்
வீணிலே கொல்ல ,வேண்டா
        விதத் தினித் தினம்ஒன் ருக

ஊண்உனக் களிப்போம்' என்ன,
உண்மையாக் கொண்டு சிங்கம்
ஆணையும் இட்டொவ் வொன்று
அருந்திஅங் கிருக்கும் நாளில். (2)

தனிமுயல் ஒன்றுக் கோர்நாள்
தன்முறை வருத லோடும்
'இனி அது விடாது நம்மை;
எனினும்ஓர் எடுப்பெ டுத்து
வினையையிப் போது செய்து
வென்று நாம் உயர்ந்தோ மாகில்
நனிவிலங் கனைத்தும் உய்யும்;
நமக்குநற் புகழுண்' டென்றே. (3)

கருதிஅச் சிங்கத் தின்தன்
கடும்பசி வேளை தப்பி
வருதலும், முயலை நோக்கி
மன்னன், 'நம் பசிவே ளைக்குப்
பெருமத வேழ மேனும்
பிந்துவ தில்லை; பிந்தி
வருவ தென்? உரைநீ' என்று
மனந்தனிற் சினந்து கூற. (4)

'ஐய! நின் பசித்த வேளைக்
கடியனேன் வந்தேன்; அங்கோர்
வெய்யசிங் கத்தைக் கண்டு
வெருவிஅங் கொளித்தி ருந்தேன்;
பையவே சிங்கம் ஆங்கோர்
பருமுழை புகுந்த பின்னர்த்
துய்யவுன் பக்கல் வந்தேன்
சுவாமி!' என் றிறைஞ்சி நிற்க. (5)

சிங்கம், ' நாம் அல்லால் வேறோர்
சிங்கம் நீ கண்டா யாகில்
அங்கதைக் காட்டு வா,' என்
றழைத்தலும், அழைத்துப் போய்ஓர்
பங்கமும் புனலும் சேர்ந்த
பாழ்ந்துர வதனைக் காட்ட,
அங்கதை எட்டிப் பார்த்த(து)
அதன்நிழல் உருவம் தோன்ற, (6)

தன் உரு நிழலைத் தானே
சத்துரு என்று பாய்ந்து
துன்னுபங் கத்த ழுந்தித்
துளங்கியே உயிர்இ ழந்த
தென்னலால் **உபாயத் தாலே**
**யாவையும் வெல்ல லாம்** என்
றின்னமோர் நண்டு கொக்கை
ஈர்ந்ததோர் கதையும் சொல்லும். (7)

**கேள்விகள்**

1. மிருகங்கள் சிங்கத்தோடு என்ன ஒப்பந்தம் செய்துகொண்டன?

2. கிழமுயல் சிங்கத்தைக் கொல்ல என்ன உபாயம் செய்தது?

3. சிங்கம் கிணற்றில் ஏன் பாய்ந்தது?

4. இக்கதையால் நீ அறிவது என்ன?

5. இதே நீதியை விளக்கும் வேறு கதை எது?

**பயிற்சி**

1. இப்பாட்டுக்களைப் படித்து மனப்பாடம் செய்.

2. இதில் கூறப்பட்டுள்ள கதையை உன் சொந்த வசனத்தில் எழுது.

3. இதை முயல் சொல்வதாகச் சொல்.

4. பொருள் தெரிந்துகொள்: செறியும், ஊன், அடவி, ஊண், எடுப்பு, உய்யும், வேழம், வெருவி, வெய்ய, பைய, முழை, துய்ய, பங்கம், புனல், துளங்கி, சத்துரு, ஈர்ந்தது.

5. ஒரே பொருள் உள்ள சொற்களைச் சொல்.

உண்டு, காடு, வினை, துரவு, வேழம், விலங்கு, அடவி, அருந்தி, யானை, மிருகம், உபாயம்.

6.

| ஒருமை | பன்மை |
| --- | --- |
| முயல் கொன்றது | முயல்கள் கொன்றன |
| மன்னன் வேண்டினன் | மன்னர்கள் வேண்டினர்கள் |
| வண்டி வந்தது | வண்டிகள் வந்தன. |

மேலே இடப்புறமுள்ள வாக்கியங்களில் எழுவாயும் பயனிலையும் ஒருமையாக உள்ளன. வலப்புறமுள்ள வாக்கியங்களில் எழுவாயும் பயனிலையும் பன்மையாக உள்ளன. ஆகவே ஒரு வாக்கியத்தில் எழுவாய் பயனிலை இரண்டும் எண்ணில் ஒத்திருக்கும்.

7. ஒருமை எழுவாய்களைப் பன்மையாக்கி இவ்வாக்கியங்களை மாற்றி எழுது:

சிங்கம் உயிர் இழந்தது.
நண்டு கொக்கை ஈர்ந்தது.
உடல் அழிந்தது.
வேடன் வேட்டைக்குப் புறப்பட்டான்.



# 13. நெசவுத் தொழில்

மக்கள் வாழ்க்கைக்கு உணவு, உடை, உறைவிடம் ஆகிய மூன்றும் இன்றியமையாத தேவைப் பொருள் களாகும். இவற்றைப் பெறுவதன் பொருட்டு மக்கள் பலவகைத் தொழில்களைச் செய்கின்றனர். பயிர்த் தொழில் செய்து உணவுப் பொருள்களை உற்பத்தி செய்து கொள்ளுகின்றனர். பருத்தியை விளைத்து நூல் நூற்றுப் பல வகை ஆடைகளை நெய்து உடுத் துக் கொள்ளுகின்றனர். இன்று நூற்றலும் நெசவும் பெரும்பாலும் இயந்திரங்களினால் செய்யப்படு கின்றன. ஆனால் ஆதிகாலத்தில் மக்கள் கையினு லேயே இத்தொழில்களைச் செய்து வந்தனர்.

பண்டைக் காலத்து மக்கள் சாதாரணமாகப் பாய் நெய்யவும், கூடை முடையவும் தெரிந்திருந் தார்கள். துணி நெய்வதும் இவற்றைப் போன்ற தொரு தொழிலேயாகும். ஆனாலும் நெய்வதற்கான

இழைகளை நூற்கக் கற்பதற்கு முன் ஆடைகள் நெய்வது இயலாததாக இருந்தது.

பிறகு பருத்தியைக் கொண்டு நூல் நூற்று ஆடை நெய்யலாம் என்பதை மக்கள் அறிந்து கொண்டனர். எனவே அவர்கள் பருத்தியிலிருந்து கொட்டையை நீக்கி அதைக் கொண்டு மெல்லிய இழைகளைக் கையினுலேயே நூற்ருர்கள். அவ்வாறு நூற்கப்பட்ட இழைகள் போதிய முறுக்கு இல்லாமல் இருந்ததுடன் கரடு முரடாகவும் இருந்தன.

பின்னர் கதிரைக் கொண்டு நூற்ருல் விரைவாக நூற்க முடியும் என்பதை அறிந்தார்கள். அதனுல் இவைகள் கரடுமுரடு இல்லாமல் சன்னமாகவும், உறுதியாகவும் இருக்கும் என்பதையும் உணர்ந்தார்கள். உடனே கதிரால் நூற்பது எங்கும் பரவத் தொடங்கியது.

பல ஆண்டுகளுக்குப் பிறகே இராட்டையினுல் நூற்ருல் மிகவும் வேகமாக நூற்க முடிவதோடு இழைகளும் நயமாக இருக்கும் என்பது தெரிய வந்தது. எனவே கைராட்டையினுல் நூற்பது பிரபலமாயிற்று. கதிராலும் இராட்டையாலும் நூற்கத் தெரிந்த உடனே நெசவுத் தொழிலும் ஏற்பட்டது. மெல்லிய நூலைக் கொண்டு கையினுல் நெய்வது மிகவும் கடினமாக இருந்தது. எனவே மக்கள் முயன்று கைத்தறியைக் கண்டு பிடித்தனர். கைத்தறியில் நெய்யப்பட்ட மிக மெல்லிய ஆடைகள் நம் நாட்டிலிருந்து நெடுநாள்கள் வரை வெளி நாடுகளுக்கு அனுப்பப்பட்டு வந்தன.

இக்காலத்தில் நூல் நூற்பது முதல் ஆடை நெய்வது வரை யாவும் இயந்திரத்தின் உதவியால் செய்யப்படுகின்றன. ஒரு மணி நேரத்தில் எத்தனையோ

ஆயிரக் கணக்கான கெஜம் துணியை இயந்திரங்கள் நெய்து விடுகின்றன. இத்தகைய நெசவுத் தொழிற் சாலைகள் நம் நாட்டில் பல விடங்களில் உள்ளன. அவற்றுள் பம்பாய், ஆமதாபாத், சென்னை, மதுரை, கோயம்புத்தூர் முதலிய இடங்கள் மிகவும் முக்கிய மானவையாகும். தென்னுட்டில் கோயம்புத்தூரே நெசவுத் தொழிற்சாலைக்குப் பெயர் பெற்ற இடமாக விளங்கி வருகிறது.

இவ்வாறு இயந்திரங்களின் உதவியால் நூல் நூற் பது, ஆடை நெய்வது முதலிய தொழில்கள் நடை பெறுவதால் அவற்றையே வாழ்க்கைத் தொழிலாகச் செய்து வந்த பலர் வேலையின்றி வறுமைக்கு ஆளாகி வருந்துவாராயினர்.

இவ்வுண்மையை நன்கறிந்த காந்தியடிகள் நாட் டின் வறுமையைப் போக்க ஒவ்வொருவரும் கையினுல் நூற்றுக் கைத்தறியில் நெய்த ஆடையையே உடுக்க வேண்டும் என்று வற்புறுத்தினர். இதனை வற்புறுத் தவே அவர் தாம் வகுத்த வார்தாக் கல்வித் திட்டத்தில் பயிர்த் தொழிலையும், நெசவுத் தொழிலையும் மூலத் தொழில்களாகச் சேர்த்துள்ளார்.

நாம் மகாத்மாவின் விருப்பத்திற்கு ஏற்பக் கையினுல் நூற்று நெய்த கதர் ஆடைகளையே எப் பொழுதும் உடுத்த வேண்டும். அப்பொழுதுதான் நாடும் செழிக்கும்; மக்களும் சுகமாக வாழ இயலும்.

| | | |
|---|---|---|
| **உறைவிடம்** | **பிரபலம்** | **விளைத்து** |
| **இன்றியமையாத** | **தொழிற்சாலை** | **இயலாததாக** |
| **தேவைப் பொருள்** | **இயலும்** | **பெரும்பாலும்** |
| **இயந்திரங்கள்** | **இழைகள்** | **வெளிநாடுகள்** |
| **நயமாக** | **வாழ்க்கை** | **கைத்தறி** |

### கேள்விகள்

1. மக்கள் வாழ்க்கைக்கு இன்றியமையாத மூன்று தேவைப் பொருள்கள் யாவை?

2. ஆதிகாலத்து மனிதனுக்கு ஏன் ஆடை நெய்வது இயலாததாக இருந்தது?

3. முதன் முதலில் கிடைத்த நூற்புச் சாதனம் யாது?

4. வேகமாக நூற்பதற்கு ஏற்பட்ட சாதனம் யாது?

5. முதலில் கண்டுபிடிக்கப்பட்ட நெசவுக் கருவி யாது?

6. நம் நாட்டில் நெசவுத் தொழிற்சாலைகள் எங்கெங்கு உள்ளன?

7. நூற்பதும் நெய்வதும் இயந்திரங்களால் நடப்பதால் நம் நாட்டில் வறுமை உண்டானது ஏன்?

8. வறுமை நீங்க வழி கூறியவர் யார்? அவர் கூறியது என்ன?

### பயிற்சிகள்

1. உங்கள் ஊரில் கைத்தறி நெசவுத்தொழில் உண்டானல் அது செய்யப்படும் இடத்திற்குச் சென்று பார்.

2. உங்கள் ஊருக்கு அருகில் நெசவு ஆலை இருந்தால் சென்று பார்.

3. உங்கள் பாடசாலையில் நெசவுத் தொழில் கற்பிக்கப்பட்டால் நீயும் அதனைக் கற்றுக்கொள்.

4. பன்மை எழுவாய்களை ஒருமையாக்கி இவ்வாக்கியங்களை மாற்றி எழுது:

தொழிற்சாலைகள் உள்ளன.
வண்டிகள் நிற்கின்றன.
சிறுவர்கள் கற்கின்றனர்.

## 14. கடிதங்கள்

I

15, கடை வீதி,
ஈரோடு,
10–10–1951.

ஐயா,

என் அன்னையார்க்கு உடல் நலம் இல்லை என்று சென்னையிலிருந்து கடிதம் வந்துள்ளது. அவர் குணமடைய இன்னும் இரண்டு வாரங்கள் செல்லும் என்று வைத்தியர் கூறியிருக்கிருராம். அவருக்கு உடனிருந்து பணி செய்ய அங்கு யாரும் இல்லை. ஆகவே என் மாமன் என்னை உடனே புறப்பட்டு வருமாறு வற்புறுத்தி எழுதியுள்ளார். அடுத்த வாரத்திலிருந்து நம் பாடசாலையில் விடுமுறை தொடங்குகிறது. ஆகையால் தாங்கள் தயை செய்து இந்த ஒரு வாரத்திற்கு மட்டும் எனக்கு விடுமுறை கொடுத்து உதவுமாறு வேண்டிக் கொள்ளுகிறேன்.

இங்ஙனம்,
உங்கள் பணிவுள்ள மாணவன்,
**மணிவண்ணன்,**
(ஐந்தாம் வகுப்பு)

ஐந்தாவது வகுப்பு ஆசிரியர் அவர்கட்கு,
நகராண்மைக் கழக ஆரம்பப் பாடசாலை,
ஈரோடு.

## II

10, கம்பர் தெரு,
சென்னை—17,
10–10–1951.

அன்புள்ள ஐயா,

தாங்கள் அன்பு கூர்ந்து கீழே குறிக்கப்பட்டுள்ள புத்தகங்களை அடுத்த தபாலிலேயே வி. பி. மூலமாக எனது விலாசத்திற்கு அனுப்பி வைக்குமாறு வேண்டுகிறேன். உரிய விகிதப்படி கழிப்புத் தொகையைக் குறைத்து அனுப்பவும்.

இங்ஙனம்,
உங்கள் உண்மையுள்ள,
**கபிலன்.**

| | | |
|---|---|---|
| 1. | கோவை தமிழ் வாசகம் ஒன்று முதல் ஐந்து ... | ஒவ்வொரு பிரதி |
| 2. | இளங்கோ இலக்கணம் (முதற் புத்தகம்) ... | 1 |
| 3. | இலக்கியச் சிறுகதைகள் (இரண்டாம் புத்தகம்) | 1 |

தலைவர்,
ஸ்டாண்டர்ட் டெக்ஸ்ட் புக் கம்பெனி,
ஈரோடு.

III

10, கம்பர் வீதி,
சென்னை–17,
15–10–1951.

அன்புள்ள ஐயா,

நான் முன் கடிதத்தில் 'கோவை தமிழ் வாசகம்' ஒன்று முதல் ஐந்து புத்தகங்களில் ஒவ்வொரு பிரதியும், 'இளங்கோ இலக்கணம்' முதற் புத்தகம் ஒன்றும், 'இலக்கியச் சிறு கதைகள்' இரண்டாம் புத்தகம் ஒன்றும் எனக்கு அனுப்பி வைக்குமாறு எழுதியிருந்தேன். நீங்கள் அனுப்பிய கட்டில் நான் குறித்த புத்தகம் ஒன்று கூட இல்லை. வேறு ஆங்கிலப் புத்தகங்கள் ஏதேதோ இருந்தன. ஆகவே அவற்றை அப்படியே உங்களுக்குத் திருப்பியுள்ளேன். அவற்றைப் பெற்றுக் கொண்டு நான் குறித்த புத்தகங்களை உடனே அனுப்பி வைக்குமாறு வேண்டுகிறேன்.

இங்ஙனம்,
உங்கள் உண்மையுள்ள,
**கபிலன்.**

தலைவர்,
ஸ்டாண்டர்ட் டெக்ஸ்ட் புக் கம்பெனி,
ஈரோடு.

1814—6

IV

15, கம்பர் வீதி,
சென்னை–17,
15–10–1951.

அன்பு மிக்க தந்தையீர்,

வணக்கம். நானும் மற்றவர்களும் இங்குச் சுக மாக இருக்கிறோம். உங்கள் கடிதம் கண்டு, அங்குள் ளவர்கள் நலம் அறிந்து மகிழ்ந்தேன். நான் ஒவ் வொரு விஷயத்திலும் உங்கள் அறிவுரைகளைப் பின் பற்றியே நடந்து வருகிறேன். நான் காலத்தை வீணாக்காமல் பாடங்களைப் படித்துக் கொண்டும், வேறு பயனுள்ள காரியங்களைச் செய்து கொண்டும் இருக்கிறேன். நீங்கள் எழுதியபடியே எனது உடல் நலத்தில் கண்ணுங் கருத்துமாகவே இருக்கிறேன். நாள்தோறும் மாலையில் விளையாடிக் கொண்டும், விளையாட்டு முடிந்ததும் சிறிது நேரம் செய்திப் பத்தி ரிகை படித்துக் கொண்டும் வருகிறேன். நானும் வேறு சில மாணவர்களும் சேர்ந்து ஒரு வாசகசாலை ஆரம்பித்திருக்கிறோம். முக்கியமான தமிழ்த் தினசரிப் பத்திரிகைகளும், வாரப் பத்திரிகைகளும் வரவழைக் கிறோம். அந்த வாசகசாலை எங்களுக்கு மிகவும் உப காரமாக இருக்கிறது. நாள்தோறும் செய்ய வேண்டிய கடமைகளைத் தவறாமல் செய்துகொண்டும், குறித்த நேரத்தில் பாடசாலை சென்றுகொண்டும் இருக்கிறேன். ஆசிரியர்கள் என்னிடம் மிகவும் பிரியமாக இருக் கிறார்கள். மாமனும் மாமியும் என்னை மிகவும் அன்பாக நடத்துகிறார்கள்.

நான் இப்போது புதிய புத்தகங்கள் சில வாங்க வேண்டும். அன்றியும் வாசக சாலைக்கும் எனக்

குரிய பங்குத் தொகையச் செலுத்த வேண்டும். என்னுடைய சட்டைகளும் கிழிந்து விட்டன. ஆகவே நீங்கள் அன்பு கூர்ந்து இவை எல்லாவற்றிற்குமாகப் பதினைந்து ரூபா அனுப்பி வைக்குமாறு வேண்டுகிறேன்.

பாட்டனர் பாட்டியார்க்கும், அன்னையார்க்கும் எனது வணக்கத்தையும், தம்பிக்கும் தங்கைக்கும் எனது அன்பையும் தெரிவிக்கவும்.

இங்ஙனம்,
உங்கள் அன்புள்ள மகன்,
**கபிலன்.**

திரு. இராமசாமி அவர்கள்,
10, பெருமாள் கோவில் தெரு,
சேலம்.

| | | |
|---|---|---|
| ஒன்றுகூட | அன்புகூர்ந்து | செய்திப் பத்திரிகை |
| ஏதேதோ | விகிதப்படி | வாசகசாலை |
| குணம் அடைய | அறிவுரைகள் | பிரியமாக |
| பணிசெய்ய | பின்பற்றி | அன்பாக |
| பயனுள்ள | உடல் நலம் | பங்குத்தொகை |

## பயிற்சி

1. இக்கடிதங்களை மவுனமாகப் படி.

2. இவைபோன்ற கடிதங்களை எழுதிப் பழகு.

3. மாணவர் சங்கக் கூட்டத்திற்கு அழைப்புக் கடிதம் ஒன்று எழுது.

4. உங்கள் பாடசாலையில் ஒரு கொண்டாட்டத்தை விளக்கி உன் நண்பனுக்கு ஒரு கடிதம் எழுது.

5. திருத்தி வாசி.

குதிரைகள் மேய்ந்து கொண்டிருந்தது.
மன்னவன் ஆண்டு வந்தாள்.
மக்கள் தொழில்களைச் செய்கின்றன.
வண்டிகள் நிற்கின்றனர்.

| 6. இடம் | ஒருமை | பன்மை |
|---|---|---|
| தன்மை | நான் இருக்கிறேன் | நாம் இருக்கிறோம்<br>நாங்கள் இருக்கிறோம் |
| முன்னிலை | நீ சொன்னாய் | நீர் சொன்னீர்<br>நீங்கள் சொன்னீர்கள் |
| படர்க்கை | அவன் நின்றான்<br>அவள் நின்றாள்<br>அது நின்றது | அவர்கள் நின்றார்கள்<br>அவை நின்றன |

பேசுபவன் **தன்மை**. முன் நின்று கேட்பவன் **முன்னிலை**. இவர்கள் இருவரும் அல்லாத பேசப்படும் பொருள் **படர்க்கை**. ஆகவே இடம் **தன்மை**, **முன்னிலை**, **படர்க்கை** என மூவகைப்படும்.

7. **கம்பர் பிறந்தார்.** இது ஒரு வாக்கியம். இதில் பிறந்தார் என்பது பயனிலை. கம்பர் என்பது எழுவாய். இதில் செயப்படுபொருள் இல்லை. இவ்வாறு சில வாக்கியங்கள் செயப்படுபொருள் இல்லாமலும் வருவது உண்டு.

8. கீழ்வரும் வாக்கியங்களில் உள்ள எதிர்மறை வினைகளை உடன்பாட்டு வினைகளாக்கி வாக்கியங்களை மாற்றி அமைத்து வாசி:

(1) சீனப் பெண்களால் வேகமாக நடக்க முடியாது.

(2) பெண்புறா உயிர்வாழ விரும்பவில்லை.

(3) மக்கள் கல்வியறிவு பெற்றாலொழிய இச் சீர்கேடுகளைத் தடுக்க முடியாது.



## 15. மிருகக் காட்சிச் சாலை

**மணி :** அப்பா ! இன்று ஞாயிற்றுக் கிழமை. இன்று எனக்குப் பாடசாலை இல்லை. என்னை மிருகக் காட்சிச் சாலைக்கு அழைத்துப் போகிறீர்களா ?

**மங்களம் :** நானும் காட்டு மிருகங்களைப் பார்க்கவேண்டும். என்னையும் அழைத்துப் போங்கள், அப்பா !

**தந்தை :** எனக்கும் இன்று விடுமுறைதான். வாருங்கள், போவோம்.

**மணி :** மிருகக் காட்சிச் சாலையில் எல்லாக் காட்டு மிருகங்களும் இருக்குமோ, அப்பா ?

**தந்தை :** ஆம். சிங்கம், புலி, கரடி, யானை, கங்காரு, மான், ஒட்டகம் எல்லாம் இருக்கும். இன்னும் குரங்குகள், பறவை வகைகள் முதலியவையும் அங்கு வைத்திருக்கிறார்கள்.

**மணி :** நேற்றுப் பாடசாலையில் காட்டு மிருகங்களைப் பற்றிய பாடம் நடந்தது. ஆசிரியர் அவற்றையெல்லாம் பற்றிச் சொன்னார்.

**தந்தை :** இதுதான் மிருகக் காட்சிச் சாலை. அதோ எழுதியிருக்கிறது பாருங்கள். வாருங்கள், உள்ளே போகலாம்.

**மங்களம் :** அப்பா, அங்கே மக்கள் கூட்டமாக இருக்கிறார்களே, அவர்கள் என்ன பார்க்கிறார்கள் ?

**தந்தை :** அங்குச் சிங்கம் இருக்கிறது. நாமும் முதலில் அங்குப் போய்ச் சிங்கத்தைப் பார்க்கலாம், வாருங்கள்.

**மணி :** ஆம், அப்பா ! இரும்புக் கூண்டுக்குள் இரண்டு சிங்கங்கள் இருக்கின்றன !

**தந்தை :** ஒன்று ஆண் சிங்கம்; மற்றொன்று பெண் சிங்கம். ஆண் சிங்கத்திற்குக் கழுத்தில் பிடரி மயிர் உண்டு. பிடரி மயிர் இல்லாதது பெண் சிங்கம். சிங்கம் எவ்வளவு கம்பீரமாக இருக்கிறது பாருங்கள். சிங்கம் கம்பீரமான மிருகம். அதை மிருக ராஜன் என்று சொல்வார்கள். சிங்கம் காட்டில் வாழும் பிராணி. அது மாமிசம் தின்னும். யானை போன்ற பெரிய மிருகங்களையும் சிங்கம் அடித்துக் கொன்று விடும். அதன் காலில் நீண்டு வளைந்த நகங்கள் இருக்கின்றன பாருங்கள். அது நகங்களால் மிருகங்களின் உடலைக் கிழிக்கும். பெண் சிங்கம் கர்ஜிக்கிறது பாருங்கள்.

**மணி :** ஏன் அப்பா சிங்கங்களைக் கூட்டில் அடைத்து வைத்திருக்கிறார்கள் ?

**தந்தை :** சிங்கம் கொடிய மிருகம். அவற்றை வெளியில் விட்டால் எல்லோரையும் கொன்றுவிடும். அதனால் அவற்றைக் கூண்டில் அடைத்து வைத்திருக்கிறார்கள்.

**மங்களம் :** சிங்கத்தைப் பார்க்கப் பயமாக இருக்கிறது. அது கர்ஜிக்கும்போது இடி இடிப்பது போல் இருக்கிறது. என்றாலும் அதைப் பார்த்துக் கொண்டே இருக்கலாம் என்று தோன்றுகிறது !

**தந்தை :** இந்தக் கூண்டில் பாருங்கள். இது புலிக் கூண்டு. இதில் உள்ள புலியைப் பாருங்கள்.

**மங்களம் :** ஆம், அப்பா ! எங்கள் பாடப் புத்தகத்தில் புலியின் படம் இருக்கிறது. இது அந்தப் படத்தில் பார்த்த புலியைப் போலவே இருக்கிறது. இதன் பார்வையில் எவ்வளவு கொடுமை அப்பா !

**தந்தை :** இது வேங்கைப் புலி. புலியும் காட்டில் வாழும் கொடிய பிராணி. இதன் உடம்பில் கோடுகள் இருக்கின்றன பாருங்கள். புலியும் மாமிச பட்சிணி. இதுவும் சிங்கத்தைப் போலவே மற்ற மிருகங்களைக் கொன்று தின்னும். மணி, சிங்கத்திற்கும் புலிக்கும் என்ன வித்தியாசம் காண்கிறாய், சொல்.

**மணி :** சிங்கத்திற்குப் பிடரி மயிர் இருக்கிறது. புலிக்குப் பிடரி மயிர் இல்லை. சிங்கம் கம்பீரமான தோற்றம் உடையது. புலியின் தோற்றம் அப்படி இல்லை. இது கொடுமையாகத் தோன்றுகிறது.

**மங்களம் :** அப்பா, சிங்கத்திற்குப் பலம் அதிகமா ? புலிக்குப் பலம் அதிகமா ? சிங்கமும் புலியும் சண்டையிட்டால் எது வெல்லும் ?

**தந்தை :** சிங்கம் புலி இரண்டிலும் எதற்குப் பலம் அதிகம் என்று திட்டமாகச் சொல்ல முடியாது. பொதுவாகச் சிங்கத்தைக் காட்டிலும் புலிக்கே பலம் அதிகம் என்று சொல்வார்கள். சிங்கமும் புலியும் சண்டை இட்டால் பெரும்பாலும் புலியே வெல்லு மாம்.

**மணி :** அப்பா, அந்தக் கூண்டில் கரடி என்று எழுதியிருக்கிறது. அங்குப் போய் பார்க்கலாமா ?

**தந்தை :** வாருங்கள், போவோம்.

**மங்களம் :** அப்பா, நேற்று ஒருவன் தெருவில் கரடி கொண்டு வந்திருந்தான். அவன் கொண்டு வந்த கரடி போலவே இருக்கிறது அப்பா இது !

**தந்தை :** கரடியின் உடம்பில் மயிர் அடர்ந் திருப்பதைப் பாருங்கள். கரடியின் கால்களில் கூர்மையான நகங்கள் உள்ளன. இது பார்வைக்குப் பன்றியைப் போல இருக்கிறது அல்லவா ? கரடியும் மிக்க கொடுமை வாய்ந்தது. இது மக்களையும் மிரு கங்களையும் கடித்துக் கொன்றுவிடும். ஆனால் கரடி மாமிசம் தின்னாது. புற்றில் உள்ள ஈசல்களைத் தின் பதில் கரடிக்கு விருப்பம் அதிகம்.

**மணி :** அது என்ன அப்பா ? வெள்ளையாக இருக்கிறதே !

**தந்தை :** அது வெள்ளைக் கரடி. இது சாதா ரண கரடியைக் காட்டிலும் மிக்க கொடுமை வாய்ந் தது. இது குளிர் மிகுந்த பனிப் பிரதேசங்களில் வசிக்கும்.

**மணி :** ஆம், அப்பா. நான் வெள்ளைக் கரடி யைப்பற்றிப் பூகோளத்தில் படித்திருக்கிறேன்.

எஸ்கிமோக்கள் வாழும் பிரதேசத்தில் வெள்ளேக் கரடி அதிகமாம். அங்கு ஸீல், வால்ரஸ் என்னும் வேறு பிராணிகளும் உள்ளனவாம். அவை இங்கு இருக் கின்றனவா, அப்பா ?

**தந்தை :** அவை இங்கு இல்லே. அதோ காட்டுப் பன்றி இருக்கிறது பாருங்கள்.

**மங்களம் :** இது ஊரில் நாம் பார்க்கும் பன்றி யைப் போலவேதான் இருக்கிறது. ஆனல் உருவத் தில் பெரியது. இது நம்மைப் பார்த்து உறுமுகிறது பாருங்கள், அப்பா !

**தந்தை :** காட்டுப் பன்றி மிகவும் கொடியது. இதுகாடுகளில் வசிக்கும். மனிதரைக் கண்டால் உடனே மேலே பாய்ந்து கொன்று விடும். இதன் வாயில் உள்ள கோரைப் பற்களேப் பாருங்கள்.

**மங்களம் :** அப்பா, அதோ யானே பார் அப்பா ! மிருகங்களில் பெரியது யானே தானே அப்பா ?

**தந்தை :** ஆம். யானேதான் மிருகங்களில் பெரியது. யானேயும் காடுகளிலேயே வசிக்கும். யானே தழை தின்னும். யானேக்குத் துதிக்கையும் தந்தங்களும் உண்டு. மற்றப் பிராணிகளுக்கு அவை இல்லே. யானேத் தந்தம் விலேயுயர்ந்த பொருள். அதனல் பல பொருள்கள் செய்வார்கள். நம் நாட்டில் யானே எங்கு அதிகமாக இருக்கிறது தெரியுமா ?

**மணி :** தெரியும் அப்பா. மலேயாளப் பிர தேசத்தில் உள்ள காடுகளில் யானேகள் அதிகமாக உள்ளன.

**மங்களம்:** யானை துதிக்கையை உயர்த்திக் கொண்டு பிளிறுகிறது பாருங்கள், அப்பா!





**தந்தை:** அதோ, ஒட்டகம், இருக்கிறது பாருங்கள். ஒட்டகம் காட்டில் வாழும் பிராணி. யானையைப் போலவே அதுவும் சாகபட்சிணி. அதன் உருவம் எவ்வளவு விகாரமாக இருக்கிறது!

**மங்களம்:** ஆம் அப்பா. அதற்குக் கழுத்து எவ்வளவு நீளம்! உடம்பில் எத்தனைக் கோணல்கள்! அதன் கால்கள் அதிக உயரம்; தலை மிகவும் சிறியது. அதன் முதுகில் மேடாக இருக்கிறதே, அது என்ன அப்பா?

**தந்தை:** அதற்கு முசுப்பு என்பது பெயர். அது ஒட்டகம் ஒன்றுக்கே உண்டு. மற்றப் பிராணி களுக்கு இல்லை.

**மணி:** ஒட்டகத்திற்குத் தானே 'பாலைவனக் கப்பல்' என்பது பெயர்?

**தந்தை:** ஆம், பாலைவனவாசிகள் ஒட்டகங் களை வளர்ப்பார்கள். ஒட்டகங்கள் அவர்களுக்கு வாகனமாக உபயோகப்படுகின்றன.

**மங்களம்:** அப்பா, அது என்ன? அதன் உடம்பெல்லாம் வரிவரியாக இருக்கிறதே!

**தந்தை :** அது வரிக் குதிரை.





**மணி :** அதோ மான்கள் மேய்கின்றன பாருங்கள், அப்பா !

**தந்தை :** அவை புள்ளி மான்கள். அவற்றின் கொம்பைப் பாருங்கள்.

**மங்களம் :** எவ்வளவு நீளமான கொம்புகள் ! வால் மாத்திரம் மிகவும் குட்டையாக இருக்கிறது. மான் பார்வைக்கு மிகவும் அழகாக இல்லை அப்பா !



**மணி :** அப்பா, அதோ பாருங்கள், ஒரு விநோதமான பிராணி! அது என்ன அப்பா ?

**தந்தை :** அது கங்காரு என்னும் பிராணி. அதன் வயிற்றின் அடியில் பாருங்கள், பையில் குட்டியைத் தாங்கிக் கொண்டிருக்கிறது. அதன் உடல்

முள்ளம் பன்றியின் உடல் போல முட்களால் மூடப் பட்டிருப்பதைக் கவனியுங்கள். அதன் முகத்தைப் பார்த்தீர்களா? மூஞ்சூற்றின் முகம் போன்று இருக் கிறது அல்லவா?

**மணி :** இந்தப் பிராணி எங்கிருக்கிறது, அப்பா?

**தந்தை :** ஆஸ்திரேலியா என்னும் தேசத்தில் இருக்கிறது. நம் நாட்டில் இது போன்ற பிராணி இல்லை.

**மங்களம் :** அப்பா, அதோ பாருங்கள், எத்தனை வகையான குரங்குகள்!

**மணி :** வாலில்லாத குரங்கு கூட இருக்கிறது அப்பா! அந்தக் கருங்குரங்கைப் பாருங்கள். எப்படி இருக்கிறது! அது தாவித் தாவி வேடிக்கை யெல்லாம் செய்கிறது!

**மங்களம் :** அப்பா, அந்தக் குரங்கைப் பாருங் கள். அது வயிற்றில் குட்டியைக் கட்டிக்கொண்டு கிளைக்குக் கிளை தாவுகிறது.

**தந்தை :** குரங்குகளையெல்லாம் பார்த்துவிட் டீர்களா? வாருங்கள், பறவைகள் உள்ள இடத்திற்குப் போவோம்.

**மங்களம் :** அப்பா, அது என்ன பறவை? அவ்வளவு பெரியதாக இருக்கிறதே!

**தந்தை :** அது நெருப்புக்கோழி. அது காடு களில் வசிக்கும்.

**மங்களம் :** அது நெருப்பைத் தின்னுமோ அப்பா?

**தந்தை :** ஆம். அது தணல் கட்டிகளைத் தின்னும்; சிறிய கூழாங் கற்களையும் விழுங்கிவிடும்.

**மணி :** எத்தனை வகையான பறவைகள் வைத்திருக்கிறார்கள் பாருங்கள், அப்பா! ஒவ்வொன்றிலும் எத்தனை விதங்கள்!

**மங்களம் :** அதோ பாருங்கள் அப்பா, விதம் விதமான கிளிகள் இருக்கின்றன!

**தந்தை :** பச்சைக்கிளி, வெள்ளைக்கிளி, சிவப்புக்கிளி, பஞ்ச வர்ணக்கிளி எல்லாம் இருக்கின்றன.

**மங்களம் :** அப்பா, அந்தப் பஞ்ச வர்ணக்கிளி எவ்வளவு அழகாக இருக்கிறது பாருங்கள்!

**தந்தை :** எல்லாம் பார்த்தாகி விட்டது. வாருங்கள் வீட்டுக்குத் திரும்புவோம்.

**மங்களம் :** இந்த மிருகக் காட்சிச் சாலையை யார் வைத்து நடத்துகிறார்கள்?

**தந்தை :** பொது மக்களின் நன்மைக்காக அரசாங்கத்தார் வைத்து நடத்துகிறார்கள். இதற்காகப் பல ஆயிரக் கணக்கில் பணம் செலவாகிறது.

| | | |
|---|---|---|
| **காட்சி** | **கொடுமை** | **பாய்ந்து** |
| **சாகபட்சிணி** | **தாவுதல்** | **பட்சிணி** |
| **வித்தியாசம்** | **முசுப்பு** | **மற்றொன்று** |
| **கூட்டமாக** | **திட்டமாக** | **விதம் விதமான** |
| **பஞ்சவர்ணம்** | **பிடரிமயிர்** | **முடியாது** |
| **வரி வரியாக** | **நடத்து** | **கம்பீரமாக** |
| **அடர்ந்து** | **நீளமாக** | **நன்மை** |
| **அடைத்து** | **சாதாரண** | **தாங்கிக் கொண்டு** |
| **செலவு** | **அரசாங்கத்தார்** | **மூஞ்சூறு** |

**கேள்விகள்**

**1. காட்சிச் சாலையில் கண்ட மிருகங்கள் யாவை?**

**2. அவர்கள் காட்சிச் சாலையில் என்னென்ன பறவைகளைக் கண்டார்கள்?**

3. சிங்கம் எப்படிப்பட்ட மிருகம்? அதை என்ன வென்று சொல்வார்கள்?

4. சிங்கத்திற்கும் புலிக்கும் உள்ள வித்தியாசம் என்ன?

5. வெள்ளைக் கரடி எங்கு வசிக்கும்?

6. மற்றப் பிராணிகளுக்கு இல்லாமல் யானைக்கு மட்டும் உள்ள உறுப்பு எது?

7. ஒட்டகத்திற்கு வழங்கும் வேறு பெயர் என்ன?

8. கங்காரு எந்த நாட்டில் இருக்கிறது?

9. மிருகக் காட்சிச் சாலையை யார் நடத்து கிறார்கள்? ஏன்?

### பயிற்சி

1. மிருகக் காட்சிச் சாலை உள்ள இடத்தைச் சொல்.

2. அதற்குப் போகும் மார்க்கத்தைச் சொல்.

3. மிருகக் காட்சிச் சாலைக்குச் சென்று பார்.

4. அங்குள்ள ஒவ்வொரு பிராணியைப் பற்றியும் தெரிந்து கொள்.

5. அவற்றைக் குறிப்புப் புத்தகத்தில் குறித்துக் கொள்.

6. மாமிச பட்சிணி, வெல்லும், குளிர், உயர்த்தி, அழகு, செலவு—இவற்றிற்கு எதிர்ச் சொற்கள் சொல்.

7. கீழே கோடிட்ட இடங்களில் எதிரில் தரப்பட்டுள்ள சொற்களில் பொருத்தமானதை வைத்து வாசி:

சிங்கத்தை —— என்பர் (மிருகராஜன், பாலை வனக் கப்பல்)

புலி —— ஆகும் (மாமிச பட்சிணி, சாகபட்சிணி)

கங்காரு —— பிராணி (விநோதமான, விகார மான) —— கம்பீரமான தோற்றம் உடையது. (சிங்கம், புலி)

—— முதுகில் முசுப்பு உண்டு. (ஒட்டகத்திற்கு, யானைக்கு)



# 16. புத்தர்

உலகத்தில் தருமம் குறைந்து பாவம் மிகும் காலங்களில் கடவுள் அருளால் பெரியோர் பலர் தோன்றி அறநெறியை நிலைநிறுத்துவர். அவ்வாறு தோன்றும் பெரியோர் அவதார புருஷர் என்று மக்களால் பாராட்டப் பெறுவர். புத்தரும் அத்தகைய அவதார புருஷரே யாவார். புத்தரது கொள்கைகளைப் பின்பற்றி நடப்பவர் புத்த மதத்தினர் ஆவர். புத்த மதம் சீனு, ஜப்பான், நேபாளம், திபெத், பர்மா, இலங்கை முதலிய நாடுகளில் பரவியுள்ளது. நம் நாட்டிலும் அம்மதத்தினர் சிலர் உளர்.

வட இந்தியாவில் கபிலவாஸ்து என்னும் நகரத்தில் சுத்தோதனர் என்பவர் அரசு செலுத்தி வந்தார். அவருக்கு நெடுங்காலமாக மகப்பேறு இல்லை. பிறகு கடவுளருளால் ஒரு குழந்தை பிறந்தது. அச்செல்வக் குழந்தையே புத்தர் என்னும் பெரியார். சுத்தோதனர் அக்குழந்தைக்குச் சித்தார்த்தன் என்று பெயரிட்டு வளர்த்து வந்தார். தக்கவயதில் யசோதரை என்பாளை அவருக்கு மணம் புரிவித்தார். சித்தார்த்தர் தம் மனைவியோடு பத்து ஆண்டுகள் இல்வாழ்க்கை நடத்தினர். ஆயினும் அவர் உள்ளம் இல்வாழ்க்கையில் ஈடுபட்டிருக்கவில்லை. அவர் நாட்டில் மக்கள் வறுமையினாலும், பிணியினாலும் துன்புறுவதைக் கண்டார். அவர் மனம் மிக்க துன்பத்தை அடைந்தது ; அதனை நீக்க வழிகண்டுபிடிப்பதில் கருத்துக் கொண்டார்.

இவ்வாறு இருக்கும் காலத்தில் அவர் ஒரு நாள் முதியவன் ஒருவனையும், நோயாளி ஒருவனையும், பிணம் ஒன்றினையும் கண்டார். அப்பொழுது உலக இன்பங்களை வெறுத்துத் துறவியாதலே இன்பத்தை அடையும் வழியென்பது அவர் மனத்தில் தோன்றியது. சிறிது காலத்தில் அவருக்கு ஒரு மகன் பிறந்தான்.

பிறகு ஒருநாள் இரவில் தம் மனைவியும், குழந்தையும் தூங்குகையில் அவர் அரண்மனையிலிருந்து புறப்பட்டு வெளிச்சென்று துறவியானர். அவர் முதன் முதலில் மகததேசம் சென்று அங்குக் குகைகளில் தங்கித் தவம்புரியும் முனிவர்களைக் கண்டார் ; அவர்களிடம் வைதிகமதக் கொள்கைகளைக் கற்றறிந்தார் ; பின்னர் உருவேலா என்னும் வனத்தில் சென்று கடுந்

தவம் புரிந்தார். ஒருநாள் அவர் மூர்ச்சையுற்றுக் கீழே விழுந்ததினுல் தவம் புரிதலை விட்டொழித்தார்.

பிறகு சித்தார்த்தர் பல இடங்களுக்குச் சென்று பிச்சை வாங்கி உண்டு சில நாட்கள் கழித்தார். அவர் ஒருநாள் ஓர் போதி மரத்தடியில் அமர்ந்து சிந்தனையில் ஆழ்ந்தார். சிந்தனையில் ஆழ்ந்திருந்த அவருக்கு ஞானேதயம் உண்டாயிற்று. 'ஒருவன் அறவழி நடந்து ஆசைகளை ஒழிப்பானுயின், அவன் உலகத்தில் துன்பங்களை அடையாதிருக்கலாம்' என்னும் உண்மை அவர் உள்ளத்தில் தோன்றியது. அதன் பின்னரே அவர் புத்தர் என வழங்கப் பெற்ருர்.

இவ்வாறு புதிய வழியைக் கண்ட புத்தர் அவ்விடத்தினின்று போய்க் காசியை அடைந்தார்; அங்குத் தாம் கண்ட கொள்கைகளைப் பலருக்கு அறிவித்தார். பலர் அதனை ஏற்றுக்கொண்டு அவருடைய சீடர்களானுர்கள். அவர்களுக்குப் புத்தர் தம் கொள்கைகளை நன்கு போதித்து, பலவேறு இடங்களுக்கு அவர்களை அனுப்பி, அவற்றை மக்களுக்கு விளங்க அறிவிக்குமாறு செய்தார். பிறகு அவர் அவ்விடம் விட்டு நீங்கி உருவேலா என்னும் வனம் சென்று அங்குள்ள முனிவர்களுக்குத் தம் கொள்கைகளைப் போதித்தார். அவர்களும் அவர் மதத்தைப் பின்பற்றினர்.

அதன்பின், புத்தர் மகத தேசத்திற்குச் சென்ருர். அதனை ஆண்ட அரசன் புத்தர் வருகையை அறிந்தான். அவன் தன் பரிவாரங்களுடன் எதிர் சென்று வர வேற்று அவரை அழைத்துப் போனுன்; அவரும் அவர் சீடர்களும் வாழ்ந்திருத்தற் கேற்ற மாளிகை ஒன்றை அமைத்துக் கொடுத்தான். இவ்வாறு புத்த

ருக்கு அரசன் சிறப்புச் செய்யவே, அதனை யறிந்த குடிமக்கள் அவர்பால் மிக்க பக்தி கொண்டனர்.

புத்தர் அங்குத் தங்கியிருந்த நாட்களில் வைகறையில் நீராடிச் சீடர்களுக்கு உபதேசம் செய்வார். பின்னர் நண்பகற் பொழுதில் சீடர்களுடன் பிச்சைக்குச் செல்வார். ஒரு மனையின் முன் சிறிது நேரம் நிற்பதும், அவர்கள் பிச்சை யிட்டால் ஏற்பதும், இன்றேல் ஒன்றும் பேசாது அயல் வீட்டிற்குச் செல்வதும் அவருடைய வழக்கம். புத்தர் அங்கு இருக்கும் காலத்தில், ஒருநாள் தம் தந்தையைக் காணச் சென்றபோது அவர் தாயார் தம்மையும் துறவற நிலையிற் சேர்த்துக் கொள்ளும்படி வேண்டினர். புத்தர் அவருக்குத் துறவற நிலையிற் சேர அனுமதி கொடுத்தார்.

பின்னர் புத்தர் பிறநாடுகளுக்குச் சென்றார்; அங்கெல்லாம் தம் கொள்கைகளைப் பரப்பி வருகையில் தம் புதல்வனையும் தம் மதத்தில் சேர்த்துக் கொண்டு அவனுக்கும் உபதேசம் செய்தார். அவ்வுபதேசங்கள் மகா ராகுல சூத்திரம் என்னும் பெயருடன் வழங்குகின்றன. புத்தர் ஜாதிமத வேறுபாடு கருதாது எல்லோரையும் சமமாகக் கருதித் தம் மதத்தில் சேர்த்துக் கொண்டார்; எல்லா உயிர்களிடத்தும் பேரருள் உடையவராய் விளங்கினர். இக்காரணங்களால் ஆயிரக்கணக்கான மக்கள் அவர் மதத்தைத் தழுவலாயினர். புத்த மதம் இந்தியாவின் எல்லைகளைக் கடந்து வெளிநாடுகள் பலவற்றிலும் பரவியது.

புத்த மதத்தின் முக்கியமான கொள்கைகள் தன்னடக்கமும், தன்னைச் சீர்திருத்தலுமே ஆகும். அம்மதம் அன்பையும் ஒழுக்கத்தையும் அடிப்படை

யாகக் கொண்டது. உயிர்களுக்குள் வேற்றுமை கருதாமல் எல்லாவற்றினிடமும் அன்பு செலுத்துவதும், நல்லொழுக்கத்தில் ஒழுகுவதுமே அம்மதத்தின் முடிவான நோக்கங்கள். எவ்வுயிரையும் துன்புறுத்தலாகாது; பிறர் பொருளைக் கவரலாகாது; பொய் சொல்லலாகாது; கள் உண்டல் கூடாது; தீயொழுக்கத்தில் ஒழுகலாகாது; பெற்றோர்க்குக் கீழ்ப்படிந்து நடக்க வேண்டும் என்னும் இவையே புத்தர் போதித்த ஒழுக்க முறைகளாகும்.

புத்தர் உலகத்திற்கு வழிகாட்டிய உத்தமப் பெருமக்களுள் தலை சிறந்தவர். அவர் உலகுயிர்களின் துன்பத்தைப் போக்கி இன்பம் செய்யவே பாடுபட்டார். அவருடைய போதனைகளைக் கடைப்பிடித்து ஒழுகுவோர் இன்ப வாழ்வு பெறுவர் என்பதில் ஐயமில்லை.

| | | |
|---|---|---|
| பெரியோர் | ஈடுபட்டு | ஞானோதயம் |
| அறநெறி | பிணி | அறவழி |
| அவதார புருஷர் | முதியவன் | பரிவாரங்கள் |
| புத்த மதம் | அரண்மனை | துறவறம் |
| வட இந்தியா | கொள்கைகள் | பேரருள் |
| மகப்பேறு | வளம் | தன்னடக்கம் |
| மணம் | கடுந்தவம் | அடிப்படையாக |
| இல்வாழ்வு | சிந்தனை | கீழ்ப்படிந்து |

**கேள்விகள்**

1. புத்த மதம் பரவியுள்ள நாடுகள் யாவை ?
2. புத்தருடைய இளமைப் பெயர் யாது ?
3. புத்தருக்கு உலக வாழ்க்கையில் வெறுப்புண்டானது எவ்வாறு ?
4. புத்தருக்கு உண்டான ஞானோதயம் யாது ?

5. முதன் முதலில் புத்த மதத்தில் சேர்ந்தவர்கள் யார்?

6. புத்த மதத்தில் பலர் சேரக் காரணம் என்ன?

7. புத்த மதத்தின் முக்கியக் கொள்கைகள் யாவை?

8. புத்தர் உபதேசித்த ஒழுக்க முறைகள் யாவை?

## பயிற்சி

1. புத்தருடைய முழு வரலாற்றையும் படித்துத் தெரிந்துகொள்.

2. முகம்மது நபி, ஏசுநாதர், இராமகிருஷ்ணர் காந்தியடிகள் ஆகியோருடைய வரலாறுகளையும் படித்துத் தெரிந்து கொள்.

3. மணம்—திருமணம், வாசனை. இவ்வாறு இரு பொருள் தரும் சொற்களைக் குறித்துக்கொள்.

4. பொருள் கூறு : பிணி, வனம், அறம், ஞானம்.

5. அவதார புருஷர், அறநெறி, இல்வாழ்க்கை, கடுந்தவம், அடிப்படையாக, கீழ்ப்படிந்து, பரிவாரங்கள்,— இவற்றை உன் சொந்த வாக்கியங்களில் வைத்து எழுது.

6. எதிர்ச் சொல் கூறு: அறம், முதியவன், துறவறம்.

7. பிரித்து எழுது: தன்னடக்கம், ஞானோதயம், நல்லொழுக்கம்

8. குழந்தை பிறந்தது.
சிங்கங்கள் இருக்கின்றன.
இன்ப வாழ்வு பெறுவர்.

இவ்வாக்கியங்களில் பிறந்தது என்னும் வினைச்சொல் முன் நடந்ததைக் காட்டுகிறது. இது இறந்த காலம்.

இருக்கின்றன என்னும் வினைச்சொல் இப்பொழுது நடந்துகொண்டிருப்பதைக் காட்டுகிறது. இது நிகழ் காலம்.

பெறுவர் என்னும் வினைச்சொல் இனி நடக்கப் போவதைக் காட்டுகிறது. இது எதிர்காலம்.

இறந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் எனக் காலங்கள் மூன்று.




# 17. ஔவையார் தூது

## காட்சி 1

**இடம் :** காஞ்சிநகர், அரண்மனை.

**காலம் :** காலை

**உறுப்பினர் :** தொண்டைமான், ஔவையார்.

(தொண்டைமான், ஆசனத்தில் அமர்ந்திருக்கிறான். வாயிற் காவலன் வருகின்றான்)

**வாயிற் காவலன் :** அரசர் பெருமானே! அருந் தமிழ்ப் புலமை அம்மையார் ஒருவர் உங்களைக் காண வேண்டி வாயிலில் வந்துள்ளார். அவர் பெயர் ஔவை யார் என்றார்.

**தொண்டைமான் :** ஔவையாரா! விரைந்து சென்று வரவிடு.

(அரசன் எழுந்து எதிர்கொண்டு வருகிருன்.)

செந்தமிழ்ச் செல்வியீர், வருக! நும் வரவு நல் வரவாகுக! உமது பெரும் புலமையையும் அரசியல் அறிவுத் திறத்தையும் புலவர் பலர் புகழ்ந்து கூறக் கேட்டு மகிழ்ந்துள்ளேன். உம்மைக் காணவேண்டும் என்னும் அவா எனக்கு மிக்கிருந்தது. அது இன்றே கைகூடியது. வந்து இருக்கையில் அமருங்கள்.

(அரசனும் ஔவையாரும் ஆசனங்களில் அமர்கின்றனர்.)

**ஔவையார் :** தொண்டை நாட்டு மன்னரே, உமது செங்கோல் ஆட்சியைப் பற்றியும், உமது வீரமும் ஈகையுமாகிய விழுமிய குணங்களைப் பற்றியும், தமிழ் மொழிப் பற்றைப் பற்றியும் நானும் நிரம்பக் கேள்வியுற்றிருக்கிறேன். உம்மையும், உமது நாட்டையும் காணவேண்டும் என்னும் அவா எனக்கு நீண்ட காலமாக இருந்து வந்தது. அதற்குரிய சமயம் இப்பொழுதே வாய்த்தது.

**தொண்டைமான் :** அம்மையீர், உம்மை வரவேற்று உபசரிக்கும் பேறு எனக்குக் கிடைத்தது பற்றி மிகவும் பெருமை அடைகிறேன். உங்களுக்கு என் அரண்மனைச் சிறப்பையெல்லாம் காட்ட விரும்புகின்றேன்.

**ஔவையார் :** நான் உமது சிறப்பையெல்லாம் கண்டு களிக்கவே வந்துள்ளேன். உமது விருப்பப்படியே செய்வேன்.

**தொண்டைமான் :** தமிழ்த் தாயரே, இது ஓவிய மண்டபம். இதில் பல நாட்டு ஓவியப் புலவர்களையும் கொண்டு வெவ்வேறு வகையான ஓவியங்

களைத் தீட்டச் செய்திருக்கிறேன். இது சிற்பக்கூடம். சிற்பக்கலையில் தேர்ச்சி பெற்ற புலவர்களால் செய்யப்பட்ட சிற்பங்கள் இதில் சேமித்து வைக்கப்பட்டுள்ளன.

**ஔவையார் :** காஞ்சிபுரம் எப்பொழுதுமே கலை வளர்ச்சிக்குப் பெயர்போனது. காஞ்சி அரசர்கள் கலை விநோதர்கள் என்பதை நான் முன்னமே கேட்டிருக்கிறேன். அதை நான் இப்பொழுது நேரில் காண்கிறேன். இந்த அரண்மனையே ஒரு கலைக் களஞ்சியமாக அன்றோ காட்சி யளிக்கின்றது !

**தொண்டைமான் :** அம்மையீர் ! இதோ இந்தப் படைக்கலக் கொட்டிலைப் பாரும். இவை யாவும் இப்பொழுது புதியவையாகச் செய்யப்பட்ட படைக் கலங்கள். இவை போன்ற படைக்கலங்களை நீங்கள் உங்கள் அதியனிடம் கண்டது உண்டோ ?

**ஔவையார் :** இவை போன்ற படைக்கலங்களை எங்கள் அதியனிடம் காண முடியாது. இவை காம்பு திருத்தி, வடித்து, நெய் தடவி, பள பளப்பாக அரண்மனையில் வைக்கப்பட்டிருக்கின்றன. இவற்றிற்கு மயில் பீலி அணிந்து மாலை சூட்டியிருப்பது எவ்வளவு நேர்த்தியாக இருக்கிறது ! இவை அடுக்கடுக்காக அடுக்கி வைக்கப்பட்டிருக்கும் அழகைப் பார்த்தால் கொலு வைக்கப்பட்டிருப்பது போல் தோன்றுகிறது. எங்கள் அதியன் படைக்கலங்களோ, நாள் தோறும் போரில் பகைவர் உடல்களைக் குத்திப் பிளப்பதால் காம்பு முறிந்து, வாய் மடிந்து, சிதைந்து கொல்லன் உலைக் களத்திலே கிடக்கின்றன. அவற்றை இவற்றிற்கு ஒப்பாகக் கூற முடியுமோ ? ஒரு காலும் முடியாது.

**தொண்டைமான் :** அன்னையே, உமது உட் கருத்தை உணர்ந்து கொண்டேன். உங்கள் அதியன் நாள்தோறும் போர் புரிந்து வெற்றி பெறும் வீரன் என்றும், நான் போர்ப் பயிற்சியே இல்லாதவன் என்றும் கூறுகின்றீர் ! இது தானே உமது உட் கருத்து?

**ஔவையார் :** நீர் உணர்ந்தது அதுவானுல் உண்மையே. எங்கள் அதியன் வெற்றி வீரன் மாத்திரம் அல்லன் ; கொடை வீரனும் ஆவான். என்னைப் போன்ற புலவர்களுக்கெல்லாம் தஞ்சமாக உள்ளவன் அவன். அவன் அருங்குணங்களை நீர் அறியின் அவனோடு பகை கொள்ள மாட்டீர் ; தோழமை கொண்டு வாழ்வீர். எனக்கு உங்களிடையே வேற்றுமை இல்லை. ஆனுல் அதியமானை நீர் போரில் வெல்லுவதென்பது எளிய காரியம் அன்று. நீங்கள் இருவரும் எதிர்த்துப் போர் தொடங்குவீரானுல் தமிழகமே நிலை குலைந்து போகும். நீர் போர் ஆசையை விட்டு அதியமானோடு நட்புக் கொள்வீரானுல் தமிழகத்தைப் பெரிய ஆபத்திலிருந்து பாதுகாத்தவர் ஆவீர். தமிழ் மக்கள் உம்மை வழி வழியாக வாழ்த்துவர்.

**தொண்டைமான் :** செந்தமிழ்த் தாயரே, நான் அதியன் பெருமையை அறியாமல் ஆணவத்தால் அறிவு மயங்கி அவன் மீது பகைமை பாராட்டினேன். உமது அறிவுரையால் மனம் தெளிந்தேன். அவனோடு போர் தொடுக்கும் எண்ணத்தை விட்டொழித்தேன். இனி உமது விருப்பப் படியே அதியனோடு அன்பு பூண்டு வாழ்வேன்.

**ஔவையார் :** தொண்டையர் தலைவரே, இதுவே நான் உம்மிடம் வேண்டி வந்த பரிசு. இனி நான் சென்று வருவேன். விடை தருவீராக.

(ஔவையார் போகின்றார்)

| | | |
|---|---|---|
| பகைமை | கைவிடுதல் | அவா |
| கைகூடியது | உபசரி | பேறு |
| கலைக்களஞ்சியம் | பீலி | அடுக்கடுக்காக |
| படைக்கலம் | உலைக்களம் | தஞ்சம் |
| வழிவழியாக | பூண்டு | விடை |

## கேள்விகள்

1. அதியமான் தொண்டைமானிடம் யாரைத் தூதாக அனுப்பினான் ?
2. தொண்டைமானின் படைக்கலங்களைக் கண்ட ஔவையார் கூறியது என்ன ?
3. ஔவையார் கூறியதைக் கேட்ட தொண்டைமான் அவருக்கு அளித்த வாக்குறுதி யாது ?

## பயிற்சி

1. இந்த நாடகத்தைப் படி.
2. இதை உன் நண்பர்களோடு சேர்ந்து நடித்துப் பழகு.
3. இதில் நீ யாராக நடிக்க விரும்புகிறாய் ? ஏன் ?
4. கோடிட்ட இடங்களில் ' போ ' என்னும் வினைச் சொல்லைப் பொருத்தமாக மாற்றி அமைத்து வாசி.

ஔவையார் முன்பு தூது———
நான் இப்பொழுது பாடசாலைக்குப்———
நீ நாளை சென்னைக்கு———

5. **நான் அறிவேன் :** இவ்வாறே கீழே கோடிட்ட இடங்களைப் பூர்த்தி செய்து சொல் :

| | |
|---|---|
| நான் அறிவேன் | நாங்கள் ———— |
| நீ ———— | நீங்கள் ———— |
| அவன் ———— | அவள் ———— |
| அவர் ———— | அவர்கள் ———— |
| அது ———— | அவை ———— |

6. **அரசர்.**

**அரசர் அறிந்தார்**

முன்னுள்ள அரசர் என்னும் சொல் ஒருவரின் பெயரைக் குறித்து நிற்கிறது. **அரசர் அறிந்தார்** என்பதிலுள்ள அரசர் என்னும் சொல் அறிந்தார் என்னும் பயனிலைக்கு எழுவாய். இவ்விரு சொற்களும் பொருளில் வேறுபட்டிருக்கின்றன. இவ்வாறு பெயர்ச் சொல் பொருளில் வேறுபடுவதற்கு **வேற்றுமை** என்பது பெயர்.

| | |
|---|---|
| ஔவையார் | ஔவையாரிடமிருந்து கவர்ந்தார் |
| ஔவையார் வந்தார் | |
| ஔவையாரை வரவேற்றார் | ஔவையாரது பாட்டு |
| ஔவையாரால் அறிந்தார் | ஔவையாரிடம் சென்றார் |
| ஔவையாருக்குக் கொடுத்தார் | ஔவையாரே ! வருக. |

7. இப்பாடத்திலிருந்து அறுவகைப் பெயர்ச் சொற்களுக்கும் ஒவ்வோர் உதாரணம் கொடு.

8. உயர்திணைச் சொல்லுக்கு மூன்று உதாரணம் சொல்.

9. அஃறிணைச் சொல்லுக்கு ஆறு உதாரணம் சொல்.



## 18. வீரமா முனிவர்

செந்தமிழ் இலக்கியங்களில் சிறந்து விளங்கும் காப்பியங்கள் பல. இவை பல வேறு சமயங்களைச் சார்ந்தவை. இராமாயணம் ஒரு வைணவ நூல். மணிமேகலை பௌத்தமத நூல். பெரிய புராணம் சைவ மதத்தினரது தலையாய நூல். சீராப் புராணம் என்பது மகம்மதியரது காப்பியம். அது போலவே தேம்பாவணி என்பது கிறித்துவ சமயத்தை எடுத்துரைக்கும் சீரிய நூலாகும்.

தேம்பாவணி என்னும் செந்தமிழ் நூலைப் பாடியவர் வீரமா முனிவர் என்னும் இத்தாலியராவர். இவர் தம் நாட்டைத் துறந்து நம் நாட்டுக்கு ஏசுவின் பணி புரிய வந்தவர். சமயத்தொண்டு புரிய வந்தவர்

தமிழ்த் தொண்டும் புரியலானார். அதனால் இவரது தமிழ்த் தொண்டும், சமயத் தொண்டும் ஒன்றற் கொன்று உதவலாயின.

வீரமா முனிவர் இயற் பெயர் **ஜோஸப் பெஸ்கி** என்பதாம். இவர் கி. பி. 1680ம் ஆண்டு நவம்பர் திங்களில் இத்தாலி நாட்டிலே **கஸடிகிலியோன்** என்னும் நகரில் தோன்றினார். இவரது தந்தையின் பெயர் **கண்டால்போ பெஸ்கி**; தாயின் பெயர் **எலிசபெத் பெஸ்கி.** ஜோஸப் பெஸ்கி இலக்கியப் படிப்பை முடித்த பின்னர் கடவுள் திருப்பணிக்குத் தம்மை ஒப்புக் கொடுத்து, தமது பதினெட்டாவது வயதிலேயே ஏசு சபையில் சேர்ந்தார். பின்னர் இவர் பல் வேறு மொழிகளைக் கற்றுத் தேர்ந்தார்; பிரஞ்சு, கிரேக்கம், எபிரேயம், போர்த்துகீஸ், தெலுங்கு, வடமொழி, தமிழ் ஆகிய மொழிகளை நன்கு கற்றார். எனினும் இவர் எல்லாவற்றுக்கும் மேலாகத் தமிழ் மொழியில் சிறந்த புலமை பெற்று விளங்கினார்.

பெஸ்கி 1706-ம் ஆண்டு குரு பட்டம் பெற்றுச் சமயத் தொண்டுகளில் ஈடுபடலானார். இவர் 1710ம் ஆண்டு இந்தியா வந்து சேர்ந்தார். அக் காலத்தில் இந்தியாவில் கிறித்து மதத்திற்கு எதிர்ப்பு இருந்து வந்தது. அதனால் நம் பெஸ்கி அவர்கள் தொடக்கத்தில் பல அல்லல்களுக்கு ஆளாக நேர்ந்தது. அவற்றை இவர் தம் கலங்கா மனத்தாலும், சலியா உழைப்பாலும் களைந்தார்; தமிழ் நாட்டில் பலவிடங்களுக்கும் தடையின்றிச் சென்று சமயத் தொண்டுகளைச் செய்து வருவாராயினர். அக் காலத்துத் தமிழ் நாட்டில் பாளையக்காரனாக விளங்கிய சந்தா சாகிபு பெஸ்கி

அவர்களைப் போற்றிப் பட்டமும் பதவியும் வழங்கினான்.

பெஸ்கி தமிழில் உள்ள காவியங்களை நன்கு கற்றார்; கற்ற நூல்களில் உள்ள சொற்களையும், கருத்துக்களையும் மனத்திற் கொண்டு தேம்பாவணியென்னும் செந்தமிழ் நூலை இயற்றினார்; இதனை மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் அரங்கேற்றினார். சங்கத்து இருந்த தமிழ் வாணர்கள் பெஸ்கி சுவாமியாரை மிகவும் பாராட்டி அவரது பெருமைக்கு அறிகுறியாக 'வீரமா முனிவர்' என்னும் விழுமிய பட்டத்தை அளித்தனர்.

வீரமா முனிவர் தமிழ் மொழிக்குச் செய்த தொண்டுகள் பல. இவர் தம் சமயத்தைப் பற்றிய நூல்களை ஆக்கியதோடு அமையவில்லை. வீரமா முனிவர் தமிழ் எழுத்துக்களில் இருந்த ஒருசில குறைகளைப் போக்க முற்பட்டார். அக் காலத்தில் மெய்யெழுத்துக்கள் புள்ளி பெறுமலிருந்தன. எகர ஒகரங்கள் நெட்டெழுத்தாக வரும்போது தம் மீது புள்ளிகள் பெற்று விளங்கின. இவை அக் காலத்திலிருந்த தமிழர்களுக்கே இடரை விளைத்தன. வீரமா முனிவர் இவ்விடரைப் போக்க நினைந்தார்; மெய்யெழுத்துக்கள் என்றறிய அவற்றின் மேல் புள்ளிகளைப் பொறித்தார்; நெட்டெழுத்தென அறிய எகர ஒகரங்களில் இக் காலத்துள்ள வேறுபாடுகளைச் செய்தருளினார். தமிழ் மொழியில் செய்த இச் சீர்திருத்தத்தை இவர் தமிழுக்குச் செய்த முதற்பெருந் தொண்டு என்று கூறலாம்.

வீரமா முனிவர் தமிழகத்தில் வாழ்ந்த காலத்தில் தமிழ் மொழியில் ஒரு சிலரே புலமை'பெற்றிருந்தனர். இதற்குக் காரணம் தமிழ் மொழியில் உரைநடை நூல்

கள் இல்லாமையே என்பதை முனிவர் உணர்ந்தார் ; செய்யுளின் வாயிலாக அறிவு ஊட்டுவதை விட உரை நடை நூல்களின் வாயிலாக அறிவூட்டுதல் எளிது என்பதை அறிந்தார் ; அதற்கெனப் பல உரை நடை நூல்களை ஆக்கலானர். பரமார்த்த குரு கதை, வேதியர் ஒழுக்கம், வேத விளக்கம், முதலிய நூல்கள் இதற்கெனவே எழுதப்பட்டவையாகும்.

வீரமா முனிவர் காலத்தில் தமிழ் மொழியில் அகராதிகள் இல்லை. அக் காலத்தில் செய்யுளால் செய்யப்பட்ட நிகண்டுகளே இருந்தன. முனிவர் மேனாட்டு மொழிகளில் உள்ளன போன்ற அகராதியை ஆக்க முயன்று, சதுரகராதி என்ற அகராதியை இயற்றித் தமிழ் மொழியை வளம்படுத்தினர்.

வீரமா முனிவர் இலக்கண நூல்கள் பலவற்றைச் செய்தார். தொன்னூல் விளக்கம் என்னும் அரிய நூலும், கொடுந்தமிழ் இலக்கணம் என்னும் நூலும் இவரால் எழுதப்பட்டன. இன்னும் இவர் திருக் குறளின் அறம், பொருள் என்ற இரு பால்களையும் இலத்தீன் மொழியில் பெயர்த் தெழுதினர். இங்ஙனம் வீரமா முனிவர் செய்யுள், உரைநடை, இலக்கணம், மொழி பெயர்ப்பு ஆகிய நூல்களை ஆக்கித் தமிழ் மொழிக்குச் செய்த தொண்டு அளவிடற்கரியதாகும்.

வீரமா முனிவர் ஓர் உண்மைக் கவிஞர். இவரு டைய திறத்தைத் தேம் பாவணி நமக்குத் தெளிவாக் கும். இவரது தன்னல மற்ற தெய்வத் தொண்டை இவரது பிற நூல்கள் நமக்கு அறிவுறுத்தும். இவர் ஒரு சிறந்த தியாகி ; வாது புரியும் வன்மை மிக்கவர். இவருடன் வாது புரிந்த பலர் இவர் சொல்லுக்கு அஞ்சி அகன்றனர் என்பர்.

வீரமா முனிவர் தம் இறுதிக் காலத்தை அம்பலக் காடு என்னும் ஊரில் கழித்தார். அங்கிருந்த வேத சாத்திரக் கல்லூரியில் கண் காணிப்பாளராக இருந்து அருங்கடன் ஆற்றி வந்தார். மூப்பினுல் உடலும், உழைப்பினுல் உள்ளமும் தளர்ந்த அருந்தமிழ் முனிவர் 1747ம் ஆண்டு இறைவன் திருவடி நீழலில் இளைப்பாற இம் மண்ணுலகை நீத்தருளினர்.

இத்தாலியராகிய இவர் நம் மொழிக்குச் செய்த தொண்டுகளுக்கு நாம் செய்யும் கைம்மாறு ஒன்றுளது. அது இவர் இயற்றிய செந்தமிழ் நூல்களை நன்கு கற்று மேம்படுவதே யாகும்.

| | | |
|---|---|---|
| இலக்கியம் | தொடக்கம் | வேறுபாடு |
| காப்பியம் | அல்லல் | வாயிலாக |
| பல்வேறு | ஆளாக | உரைநடை |
| துறந்து | நேர்ந்தது | ஒழுக்கம் |
| பணி | சலியா | திறம் |
| தொண்டு | அரங்கேற்றம் | வாது |
| தோன்று | பாராட்டி | வன்மை |
| ஒப்புக்கொடுத்து | விழுமிய | நீத்தார் |
| சமயம் | அமையவில்லை | மேம்பாடு |

## கேள்விகள்

1. வீரமா முனிவரின் இயற்பெயர் என்ன? அவர் எந்நாட்டினர்?
2. வீரமா முனிவர் தமிழ் நாட்டிற்கு வந்தது ஏன்?
3. வீரமா முனிவர் என்ற பட்டம் அவருக்கு யார் கொடுத்தார்கள்?
4. அவர் இயற்றிய நூல்கள் யாவை?
5. வீரமா முனிவர் தமிழுக்குச் செய்த தொண்டுகள் யாவை?

6. அவர் எப்படிப்பட்ட குணமுள்ளவர்?
7. அவருக்கு நாம் செய்யும் நன்றி யாது?

## பயிற்சி

1. வீரமா முனிவரின் தாய்நாட்டைப் படத்தில் பார்த்துத் தெரிந்துகொள்.

2. இவரைப்போலத் தமிழுக்குத் தொண்டு செய்த வேறு சில அயல்நாட்டினரைத் தெரிந்துகொள்.

3. வீரமா முனிவர் காலத்தில் தமிழ் நாட்டில் வாழ்ந்த தமிழ்ப் புலவர்களைத் தெரிந்துகொள்.

4. அம்பலக்காடு எங்கு உள்ளது என்பதைத் தெரிந்துகொள்.

5. பொருள் தெரிந்துகொள்: துறந்து, சமயம், அல்லல், விழுமிய, வன்மை, நீத்தார்.

6. கீழே கோடிட்ட இடங்களில் எதிரில் கொடுக்கப் பட்டுள்ள சொற்களைப் பொருத்தமாக மாற்றியமைத்து வாசி:

| | |
|---|---|
| —— ஏசு சபையில் சேர்ந்தார் | (பெஸ்கி) |
| பெஸ்கி பல்வேறு —— கற்ருர் | (மொழிகள்) |
| பெஸ்கி —— அனைவரையும் வென்ருர் | (அறிவு) |
| சந்தாசாகிபு —— பட்டம் வழங்கினன் | (பெஸ்கி) |
| பெஸ்கி —— இந்தியாவுக்கு வந்தார் | (இத்தாலி) |
| —— படைக்கலங்கள் | (அதியன்) |
| வீரமா முனிவர் —— வாழ்ந்தார் | (அம்பலக்காடு) |

7. செய்தார் = செய் + த் + ஆர்
காண்கிருர் = காண் + கிறு + ஆர்
வாழ்வார் = வாழ் + வ் + ஆர்

இவற்றுள் செய் என்பது செயலைக் காட்டும். இது பகுதி. ஆர் என்பது செயலைச் செய்யும் எழுவாயைக் காட்டும். இது விகுதி. த், கிறு, வ் என்பன காலத்தைக் காட்டும். இவை இடைநிலைகள்.

பகுதி, விகுதி, இடைநிலை இம்மூன்றும் பகுபத உறுப்புகள்.




# 19. செஞ்சி வீரர்

தென் ஆர்க்காடு ஜில்லாவில் செஞ்சி என்பதொரு கிராமம் உள்ளது. அதன் அருகில் பழமையான மலைக் கோட்டை ஒன்று இருக்கிறது. இருநூறு ஆண்டுகளுக்குமுன் தேசிங்கு என்னும் வீரமன்னர் அக்கோட்டையில் இருந்து ஆட்சி புரிந்து வந்தார். அவரால் அவ்வூரும் அக்கோட்டையும் சரித்திரச் சிறப்புப் பெற்றன.

தேசிங்கு இளமையிலேயே வீரத்தில் விருப்பம் உடையவராக இருந்தார். சிறுபிள்ளைப் பருவத்திலேயே அவரிடம் வீரருக்கு உரிய அடையாளங்கள் காணப்பட்டன. வில், வாள், ஈட்டி முதலியவைகளையே அவர் விளையாட்டுக் கருவிகளாக விரும்பினர். முகம்மதுகான் என்னும் மகம்மதியச் சிறுவர்

அவருக்குத் தோழர் ஆனார். இருவரும் அரண்மனை யிலேயே ஒருசேர வளர்ந்தனர். இருவரும் ஒன்றாகவே படிப்பர் ; மல்போர், வாள் போர், சிலம்பம் இவற்றைப் பழகுவர் ; குதிரைச் சவாரி செய்வர் ; காட்டில் புகுந்து வேட்டை ஆடுவர். தேசிங்கு விளையாட்டுப் பருவத்திலேயே பல வீரச் செயல்கள் புரிந்தார் ; ஒரு பெரிய வேங்கைப் புலியை எதிர்த்துப் போராடிக் கொன்றார் ; புகழ்பெற்ற மல்லன் ஒருவனைப் போரில் வென்றார் ; ஒரு சிங்கத்தோடு போர் செய்து அதனை வென்று அடக்கிப் பிடித்து வந்தார். தேசிங்கின் இவ் வீர விளையாட்டுக்களைக் கண்டு பெற்றோரும் மற் றோரும் வியப்புக் கொண்டனர்.

தேசிங்கு இளைஞராக இருந்தபோது டில்லி அரச ரிடம் ஒரு முரட்டுக் குதிரை இருந்தது. அதற்குப் பார்ாசாரி என்பது பெயர். அதை யாராலும் அடக்க முடியவில்லை. அதை அடக்குபவருக்குப் பரிசு கொடுப்பதாக டில்லி அரசர் விளம்பரப் படுத்தினார். இளைஞராகிய தேசிங்கு அக் குதிரையை அடக்கிப் புகழ்பெற விரும்பினார். அவர் மகம்மதுகானோடு டில்லிக்குச் சென்றார். யாராலும் அடக்க முடியாத அம் முரட்டுக் குதிரையை அவர் அடக்கினார் ; அதன் மீது ஏறி அமர்ந்து நெடுந்தூரம் சவாரி செய்து திரும்பினார். டில்லி அரசர் தேசிங்கின் திறமையைப் பாராட்டினார் ; அந்தக் குதிரையைத் தேசிங்குக்கே பரிசாகக் கொடுத்துவிட்டார். தேசிங்கு வெற்றி வீரராகச் செஞ்சிக்குத் திரும்பினார். பாராசாரிக் குதிரை தேசிங்கின் பிரியமான வாகனமாக இருந்து வந்தது.

தேசிங்கு செஞ்சிக்குத் திரும்பியதும் அவர்

தந்தையார் இறந்தார். தேசிங்கு செஞ்சி மன்னராக முடிசூடினர். அவர் தமது உயிர்த் தோழரான மகம்மதுகானைத் தளபதியாக அமர்த்திக் கொண்டார். தேசிங்கின் முன்னேர்கள் ஆர்க்காட்டு நவாபுக்கு அடங்கிக் கப்பம் செலுத்தி வந்தனர். தேசிங்கு பிறருக்கு அடங்கி அடிமையாக அரசாள விரும்ப வில்லை. ஆகவே அவர் அரசரானதும் ஆர்க்காட்டு அரசருக்குக் கப்பம் செலுத்துவதை நிறுத்திவிட்டார். வழக்கப்படி செஞ்சியிலிருந்து கப்பத்தொகை வராமல் போகவே ஆர்க்காட்டு அரசர் தூதரை அனுப்பினர். தேசிங்கு மன்னர் கப்பம் செலுத்த மறுத்து விட்டார்; 'நான் யாருக்கும் வணங்கிக் கப்பம் செலுத்த மாட்டேன். தைரியம் இருந்தால் உங்கள் அரசர் என்னைப் போரில் வென்று கப்பம் கொள்ளட்டும்' என்று உறுதியாகக் கூறிவிட்டார்.



தேசிங்கு மன்னரின் பதிலைக் கேட்டு ஆர்க்காட்டு அரசர் அடங்காக் கோபம் கொண்டார். ஆயினும் அவர் தேசிங்கின் வீரத்திற்குப் பயந்து உடனே போருக்குப் புறப்படவில்லை; செஞ்சியின்மீது படை யெடுப்பதற்குத் தக்க சமயத்தை எதிர்பார்த்திருந்தார். அச்சமயம் தேசிங்கு மன்னரின் தளபதியாகிய மகம் மதுகானுக்குத் திருமணம் நிச்சயமாகியது. மகம்மது கான் மணம் செய்துகொள்வதற்காகத் தமது சொந்த ஊருக்குச் சென்றார். அதனை அறிந்த ஆர்க்காட்டு அரசர், செஞ்சியின்மீது படையெடுக்க அதுவே தக்க சமயம் என்று துணிந்தார். மகம்மதுகான் திருமணத் தன்று ஆர்க்காட்டுப் படை செஞ்சியை நோக்கி எழுந்தது.




அது தேசிங்கு மன்னருக்குத் தெரிந்தது. அவர்

உடனே குதிரை வீரர் மூலமாக மகம்மதுகானுக்குச் செய்தி அனுப்பினுர். மகம்மதுகான் மணமகளுக்கு மாலை சூட்டப்போகும் சமயத்தில் குதிரை வீரர் சென்று மன்னர் செய்தியை அறிவித்தனர். மகம்மது கான் மாலையைக் கீழே வைத்துவிட்டு எழுந்தார்; 'போரை முடித்து வந்து மணத்தை முடித்துக் கொள்வேன்' என்று மணக்கோலத்தோடு குதிரைமீது பாய்ந்து ஏறினுர்; குதிரை செஞ்சியை நோக்கிக் காற்ருய்ப் பறந்தது.

மகம்மதுகான் செஞ்சியை அடைந்து மன்னரைக் கண்டார். அதற்குள் ஆர்க்காட்டுப் படை செஞ்சியை நெருங்கிவிட்டது. அவர் மன்னரிடம் விடை பெற்றுக்கொண்டு பெரும் படையோடு ஆர்க் காட்டுப் படையை எதிர்த்துச் சென்ருர். மகம்மது கான் வருவதைக் கண்டு ஆர்க்காட்டுப்படை கலக்கம் அடைந்தது. மகம்மதுகான் பகைவர் படைக்குள் புகுந்து வீராவேசத்தோடு கடும்போர் புரிந்தார். போர்க்களம் பிணக்களம் ஆயிற்று. ஆர்க்காட்டுப் படை சின்னபின்னமாகச் சிதறிப் புறமுதுகு காட்டி ஓடியது. மகம்மதுகான் வெற்றியோடு மன்னரைக் காணத் திரும்பினுர். அப்பொழுது பிணக்குவியலில் மறைந்திருந்த ஒரு பகை வீரன் மகம்மதுகானைப் பின்புறத்திலிருந்து துப்பாக்கியால் சுட்டான். துப் பாக்கிக் குண்டு கழுத்தின் பின்புறம் பாய்ந்து துளைத்தது. மகம்மதுகான் குதிரையிலிருந்து கீழே விழுந்து உயிர் துறந்தார்.

மகம்மதுகான் வஞ்சனையாகக் கொல்லப்பட்ட செய்தி தேசிங்கு மன்னருக்கு எட்டியது. அவர் ஆருத் துயரமும் அடங்காக் கோபமும் கொண்டார்.

'தோழனைக் கொன்ற பகைவர் கூட்டத்தைத் தொலைப் பேன்' என்று பொங்கி எழுந்தார்; பாராசாரிக் குதிரையின்மீது ஏறிப் பகைவர் படையை நோக்கி விரைந்து சென்றார். தேசிங்கு மன்னர் கோபாவேசத் தோடு வருவதைக் கண்டு பகைவர் படை அஞ்சி ஓடத் தொடங்கியது. அவர், ஓடிய சேனையை விடாமல் மடக்கிக் கொன்று குவித்தார்; தோழனைக் கொன்ற வஞ்சகனைத் தேடிப் பிடித்து வெட்டி வீழ்த்தினார். பிறகு அவர் சிறிது தூரத்தில் ஆர்க் காட்டு அரசர் யானைமேல் சென்றுகொண்டிருப்பதைக் கண்டுவிட்டார். உடனே விரைந்து சென்று குதிரையை அந்த யானையின்மேல் பாயவிட்டார். குதிரை முன்னங் கால்களைத் தூக்கி யானையின்மீது பாயும்போது, அதன் கீழ் மறைந்திருந்த பகைவீரன் குதிரையின் பின்னங்காலை வாளால் வெட்டிவிட்டான். பாராசாரிக் குதிரை அலறிக்கொண்டு கீழே சாய்ந்தது.

தேசிங்கு மன்னர் தமது அருமைக் குதிரையை அணைத்துக்கொண்டு கண்ணீர் விட்டு அழுதார். உண்மைத் தோழனையும், உயிருக்குயிரான பாரா சாரிக் குதிரையையும் இழந்து அவர் உயிரோடு ஊர் திரும்ப விரும்பவில்லை. அவர் அவ்விடத்திலேயே தமது வாளை மேலே வீசி, அதற்கு நேராக மார்பைக் காட்டி நிமிர்ந்து நின்றார். வாள் விசையோடு வந்து அவர் மார்பில் பாய்ந்தது. செஞ்சி வீரர் வீர மரணம் அடைந்து வீர சொர்க்கம் புகுந்தார். இச் செய்தி கோட்டையில் இருந்த அரசியார்க்கு அறிவிக்கப் பட்டது. அக் கற்பரசியாரும் தீக்குளித்துக் கண வரைப் பின்பற்றிச் சென்றார்.

தேசிங்கு மன்னரின் வீரச் சிறப்பையும், அவர்

மனைவியாரின் கற்பின் பெருமையையும் கண்ட ஆர்க்காட்டு அரசர் தம் செய்கைக்காக மிகவும் வருந்தினர். அவர் அரசியாரின் நினைவுக்காக ஆர்க்காட்டுக்கு அருகில் புதிதாக ஒரு நகரை நிர்மாணம் செய்து, அதற்கு **இராணிப்பேட்டை** என்று பெயர் வைத்தார். செஞ்சிக் கோட்டையும், இராணிப்பேட்டையும் இன்றும் அவர்கள் பெருமையை விளக்கி நிற்கின்றன.

| | | |
|---|---|---|
| பழமையான | தளபதி | துணிந்தார் |
| மலைக்கோட்டை | கப்பம் | நெருங்கி |
| இளமை | செலுத்துவதை | சின்ன பின்னம் |
| தோழன் | உறுதியாக | புறமுதுகு |
| வியப்பு | அடங்கா | வஞ்சனை |
| நெடுந்தூரம் | தக்கசமயம் | உயிருக்குயிரான |
| நிர்மாணம் | செய்தி | இழந்து |

## கேள்விகள்

1. தேசிங்கு இளமையில் எப்படிப்பட்ட குணமுள்ளவராக இருந்தார்?
2. டில்லி அரசரிடம் எப்படிப்பட்ட குதிரை இருந்தது?
3. குதிரையை அடக்கியதால் தேசிங்கு பெற்ற பரிசு யாது?
4. மகம்மதுகான் எவ்வாறு கொல்லப்பட்டார்?
5. மகம்மதுகான் இறந்த செய்தி கேட்ட தேசிங்கு என்ன செய்தார்?
6. இராணிப்பேட்டையை யார் ஏற்படுத்தினர்? ஏன்?
7. தேசிங்குக்கும் ஆர்க்காட்டு நவாபுக்கும் ஏன் பகைமை உண்டாயிற்று?

## பயிற்சி

1. இப்பாடத்தை மவுனமாக வாசி.

2. இது போன்ற வீரர் வரலாறுகளைப் படித்துத் தெரிந்துகொள்.

3. செஞ்சியுள்ள இடத்தைப் படத்தைப் பார்த்துத் தெரிந்துகொள்.

4. ஆர்க்காடு, இராணிபேட்டை—இவை உள்ள இடங்களைத் தெரிந்துகொள்.

5. ஆர்க்காட்டிலிருந்து செஞ்சிக்குச் செல்லும் வழியைத் தெரிந்துகொள்.

6. செஞ்சிக்குச் சென்று கோட்டையைப் பார்.

7. (1) இறந்தகாலமாக மாற்று: படிப்பர், பழகுவர், ஆடுவர், வருவேன், வாழ்வேன்.
   (2) நிகழ்காலமாக மாற்று: பெற்றன, சென்றூர், பறந்தது, துறந்தான், வீழ்த்தினர்.
   (3) எதிர்காலமாக மாற்று: கவலைப்படுகிறேன், விரும்புகின்றேன், படிக்கிறுன், காண்கிறோம், பெறுகிறோம்.

8. **தேசிங்கு புலியைக் கொன்றூர்**: இவ்வாக்கியத்தில் **கொன்றூர்** என்னும் வினையைச் செய்தவனைக் குறிக்கும் தேசிங்கு என்னும் சொல்லே எழுவாய். இத்தகைய வினை **செய்வினை** எனப்படும்.

இவ் வாக்கியத்தைப் **புலி தேசிங்கால் கொல்லப்பட்டது**—என்றும், மாற்றி எழுதலாம். இதில் முன் செயப்படு பொருளாய் இருந்த **புலி** என்னும் சொல்லே எழுவாயாக இருக்கிறது. அதற்கேற்றபடி வினை **கொல்லப்பட்டது** என மாறியுள்ளது. இது **செயப்பாட்டுவினை.**

9. கீழுள்ள வாக்கியங்களில் செய்வினைகளைச் செயப்பாட்டுவினைகளாக மாற்றி வாசி:

தேசிங்கர் குதிரையை அடக்கினர்.
வீரன் குதிரையின் காலை வெட்டினன்.
அரசர் தேசிங்கரின் திறமையைப் பாராட்டினர்.

## 20. தேசிங்கும் குதிரையும்

குதிரையின் அருகே வந்துநின்ருன்
குழந்தை தேசிங்கு ;
கொல்லும் வேங்கை போல நின்றது
குதிரையும் அப்போது.

பார்த்தான் மன்னன் லகானைக் கையால்
பாங்குட னேபற்றிப்
பாய்ந்தே ஏறி முதுகில் அமர்ந்தான்
பாலன் தேசிங்கு.

கலகல வென்றே சிரித்துப் பிடித்தான்
கையில் சாட்டைதனை ;
கனைத்த பரியைக் கழுத்தில் தட்டினுன்
கண்மணி தேசிங்கு ;

தட்டின தட்டில் குதிரை கிளம்பித்
தரையில் நில்லாமல்
தாவியே வானில் சென்று பாய்ந்தது
தங்கமேனிக் குதிரை.

மலையும் குன்றும் உடைந்து சிதறி
மண்ணில் விழுவதைப்பார் !
குன்று மலைகளைத் தாண்டிக் குதிரை
குதித்துப் பாயுது பார் !

அசுவம் போகும் வேகத் தாலே
அலையுது மேகமெலாம் !
மேகம் இடித்து மின்னல் கக்கி
மழையைப் பொழியுதுபார் !

புரவி போகும் வேகம் அறிந்தான்
புலிக்குட்டி தேசிங்கு ;
பொல்லாக் குதிரை தன்னைக் கொல்லப்
போகுதென் றறிந்தான்.

லகானை இழுத்துக் கொடுத்தான் சிமிட்டா
ராஜா தேசிங்கு ;
சிமிட்டா கொடுத்த வேகத்தி னாலே
திகைத்து நின்றதுபார் !

நின்ற குதிரையை டில்லிக்குத் திருப்பி
நேரே ஓட்டிவந்தான் ;
நிமிஷந் தன்னில் கீழே குதித்து
நின்றான் தேசிங்கு.

—தேசிங்கு ராஜன் கதை



# 21. வீர மங்கை

முன்னொரு காலத்தில் மலைமேலிருந்த ஓர் ஊரில், மன்னன் ஒருவன் நீதிநெறி வழுவாது அரசாட்சி செய்து வந்தான். அம்மன்னன் ஆட்சியில் குடிகள் எல்லோரும் மகிழ்வுடன் வாழ்ந்து வந்தனர். அவர்கள் அரசனைக் கடவுள் என்று எண்ணி, அவனுக்குப் பலவகையில் ஊழியம் செய்து வாழ்ந்து வந்தனர்.

அவ்வூர் மன்னன்மீது மாற்றான் ஒருவன் போர் தொடுத்தான். போர்ப் பறை முழங்கியது. போர்ப் பறையைக் கேட்ட மலையூரின் மக்கள் தங்கள் மன்னனுக்கு உதவத் திரண்டனர். வீட்டிற்கு ஒருவன் வீதம் படையில் சேர்ந்தனர்.

அவ்வூரில் நாட்டுப்பற்று, அரசனிடம் அன்பு முதலியவற்றில் சிறந்த குடும்பம் ஒன்று இருந்தது.

அக்குடும்பத்தில் இருந்தவர் அனைவரும் போர்த் தொழிலில் வல்லவர்கள்; அரசனிடம் அளவிலா அன்புடையவர்கள். அவர்களில் ஐந்து வயதுடைய சிறுவன் ஒருவனைத் தவிர்த்து ஆடவர் யாவரும் அணி வகுப்பில் சேர்ந்தனர். இதனைக் கண்ட வீட்டுத் தலைவி அடங்கா மகிழ்ச்சியுற்றாள். இவ் வீரப்பணிக்கு அனுப்ப வயது வந்த பிள்ளைகள் தனக்கு இல்லையே என்று அவள் வருந்தினாள்.

முதல் நாள் போரில் மலை அரசனுக்கு வெற்றியே. ஆயினும் அக்குடும்பத்தின் வயது சென்ற வீரன் இறந்தான். தன் தந்தை இறந்தமைக்கு அவ்வீர மங்கை வருந்தவில்லை; அவன் அரசனுக்குத் துணையாகச் சென்று நாட்டிற்காகப் போர் புரிந்து உயிர் விட்டதைப் பெருமையாகவே எண்ணி மகிழ்ந்தாள். மறு நாள் அத்தலைவியின் கணவன் இறந்தான். அவள் கலங்கவில்லை. தன் தமையனைத் தேற்றிப் போர் முகத்திற்கு அனுப்பினாள். மூன்றாம் நாள் அவனும் இறந்தான். அச் செய்தி அவள் உள்ளத்தைக் கலங்கச் செய்தது. இனிப் போருக்கு அனுப்பத் தன் வீட்டில் எவரும் இல்லையே என்று அவள் வருந்தினாள். திடீரென அவள் முகம் மகிழ்ச்சியால் மலர்ந்தது. கலங்கியிருந்த அவள் மனம் தெளிவடைந்தது.

தனக்கு இருப்பது ஒரே மகன் தான் என்பதை அவள் அறியாதவளல்லள். முன் நடந்த போர்களில் தந்தை, கணவன், உடன் பிறந்தான் என்னும் இம் மூவரும் வீர மரணம் எய்தியதையும் அவள் மறக்கவில்லை. ஆனால் அவள் தன் நாட்டுப் பற்றைக் கொண்டு தன் கடமையை ஆராய்ந்தாள்; தன் சிறு

மகனை அழைத்தாள்; அவன் தலையில் எண்ணெ யிட்டுச் சீவினாள்; வெள்ளிய உடைகளை அணிவித் தாள்; ஒரு மூலையில் கிடந்த ஒடிந்த வேலை நிமிர்த்தி அவன் கையில் கொடுத்தாள்; போர் முனைக்குச் சென்று வெற்றி பெற்று வருமாறு வாழ்த்தினாள்.

அந் நிலையில் அங்கு ஒருவீரன் குதிரையின்மேல் தோன்றினான். அவன் அம்மடந்தை செய்யும் தொழி லைக் கண்டான். அவன் கண்களில் மகிழ்ச்சிக் கண்ணீர் சுரந்தது; அவ்வம்மையை நோக்கி, அவள் செய்யும் காரியம் எத்தகைய மடமையானது என்பதை எடுத்துக் கூறினான். ஆனால் அத்தாய் அவ்வீரனுக்குத் தன் கடமைகளை எடுத்துக் கூறினாள்; தன் மகனை உடனழைத்துச் செல்லுமாறு அவனை வேண்டினாள்.

அக் குதிரை வீரன் செய்வது அறியாமல் திகைத்தான். இருந்தாற் போலிருந்து வெற்றி முரசு முழங்கியது. மலை நாட்டு மன்னனின் போர் வீரர்கள் வெற்றியை அறிவிக்கக் குதிரைகளிலேறி மலை நாட்டைச் சுற்றி வந்தனர். அவர்களில் ஒருவன், சிறுவனுடன் இருக்கும் குதிரை வீரனை அணுகி வணங்கி, ‘அரசரே, நம் படை வெற்றி பெற்றது!’ என்று கூறினான்.

அரசன் அடைந்த மகிழ்ச்சிக்கு எல்லையில்லை. அவன் அச்சிறுவனை அப்படியே தூக்கித் தன் குதிரைமீது வைத்துக் கொண்டு அரண்மனையை அடைந்தான். அதனைக் கண்டாள் வீரத்தாய். தன் னிடம் பேசியவன் அரசன் என்பதை அவள் உணர்ந் தாள். போரில் தன் உற்றார் ஒருசேர உயிரிழந்ததை

அவள் மறந்தாள்; தங்கள் மன்னன் பெற்ற வெற்றியை நினைந்து மட்டற்ற மகிழ்ச்சி கொண்டாள்; வீடும் , வாயிலும் அலங்கரித்து வெற்றி விழாவைச் சிறப்பாகக் கொண்டாடினாள். அவள் செய்கையைக் கண்டு அவ்வூர் மக்கள் வியந்தனர். அவர்கள் அவளை 'வீரமங்கை' என்று புகழ்ந்தனர்.

தாய் நாட்டின் உரிமைக்கு இணையாக அவள் இவ்வுலகில் வேறு எதையும் கருதவில்லை என்பது இச் சம்பவத்தால் விளங்குகின்றது. இத்தகைய வீரத் தாய்மாராலேயே அன்று தமிழ் நாட்டின் தனியுரிமை பாதுகாக்கப்பட்டு வந்தது.

| | | |
|---|---|---|
| நீதி | திரண்டனர் | கலங்க |
| அணுகி | வழுவாது | அறிவிலா |
| கடமை | மட்டற்ற | பறை |
| மகிழ்ச்சி | சுரந்தது | அலங்கரித்து |
| முழங்கியது | தவிர்த்து | திகைத்தான் |
| விழா | | |

## கேள்விகள்

1. மலையூர் அரசன் எப்படிப் பட்டவன்?
2. வீரத்தாய் கடமையை உணர்ந்தவள் என்பதை எதனால் அறியலாம்?
3. கலங்கியிருந்த அவள் முகம் மலர்ந்தது ஏன்?
4. போரில் தங்கள் அரசன் வெற்றி பெற்றான் என்பதை அறிந்த அம்மங்கை என்ன செய்தாள்?
5. அவளை அவ்வூர் மக்கள் வீரமங்கை என்று ஏன் புகழ்ந்தனர்?

## பயிற்சி

1. இக் கதையை மவுனமாக வாசி.

2. இது போன்ற இலக்கியக் கதைகளைப் படித்துத் தெரிந்துகொள்.

3. இதனை அரசன் சொல்வதாகச் சொல்.

4. இதனைச் சிறுவன் சொல்வதாகச் சொல்.

5. கீழ்வரும் வாக்கியங்களை இரண்டு தனி வாக்கியங்களாகப் பிரித்து எழுது :

(1) பிணக்குவியலில் மறைந்திருந்த ஒரு பகை வீரன் மகமதுகானைத் துப்பாக்கியால் சுட்டான்.

(2) குதிரை யானையின்மீது பாயும்போது, அதன் கீழ் மறைந்திருந்த பகைவீரன் குதிரையின் காலை வெட்டி விட்டான்.

(3) தாய் நாட்டின் உரிமைக்கு இணையாக அவள் இவ் வுலகில் வேறு எதையும் கருதவில்லை என்பது இச் சம்பவத்தால் விளங்குகிறது.

6. கீழ்வரும் வாக்கியங்களில் உள்ள செயப்பாட்டு வினைகளைச் செய்வினைகளாக மாற்றிச் சொல்.

(1) செய்தி வீரரால் அறிவிக்கப்பட்டது.

(2) மகமதுகான் பகைவீரனால் வஞ்சனையாகக் கொல்லப் பட்டான்.

(3) அவள் ஊராரால் புகழப்பட்டாள்.





## 22. பழைய கோட்டைப் பட்டக்காரர்

கால்நடைகளைச் செல்வமாகப் போற்றுவது நம் நாட்டு வழக்கம். நமது நாடு விவசாய நாடாகையால் நமக்குக் கால்நடைகள் இன்றியமையாத செல்வமாகின்றன. கால் நடைகளைப் போற்றி வளர்ப்பது நாட்டின் செல்வத்தை வளர்ப்பதாகும். இத்தகைய தேசீயத் திருப்பணியை விருப்பத்தோடு தொடங்கிச் சிறப்பாகச் செய்து வந்த ஒருவர் நம் தமிழ் நாட்டில் உண்டு. அவரே பழைய கோட்டைப் பட்டக்காரர்

குடியைச் சேர்ந்த **நல்ல தம்பி சர்க்கரை மன்றாடியார்** என்பவர் ஆவர்.

பழைய கோட்டை என்பது கோயம்புத்தூர் ஜில்லாவில் தாராபுரம் தாலூகாவில் உள்ளதோர் ஊர். அவ்வூரில் பட்டக்காரர் என்னும் பழைய குடியினர் வாழ்ந்து வருகின்றனர். அவர்கள் கொங்கு வேளாளர் மரபைச் சேர்ந்தவர்கள். அக்குடியின் முன்னோர் பழங் காலத்தில் சிறந்த சிற்றரசர்களாக விளங்கினர். அவர்கள் துணையால் போரில் வெற்றி பெற்ற அக்காலத்துப் பேரரசர்கள் அவர்களுக்கு **உத்தமக்காமிண்டான், மன்றாடியார்** என்ற பட்டங்களை வழங்கிச் சிறப்புச் செய்தனர். பேரரசர்களால் பட்டப் பெயர்கள் பெற்ற சிறப்பால் எல்லோரும் அக் குடியினரைப் **பட்டக்காரர்** என்று மரியாதையாக வழங்கலானார்கள். அக்குடியினருள் இருபத்தொன்பதாவது பட்டக்காரராய் இருந்தவர் நம் நல்ல தம்பி சர்க்கரை மன்றாடியார் என்பவர்.

பட்டக்காரர் மரபில் வந்தவர்களுள் சிலர் நெடுங் காலத்திற்கு முன்பே கால்நடை வளர்ப்பில் ஈடுபட்டு வந்தனர். அவர்கள் சிறந்த குதிரைகளை மிகுதியாக வளர்த்து வந்தார்கள். அக்காலத்தில் பழைய கோட்டை குதிரைகளுக்குப் பெயர் பெற்ற இடமாக விளங்கியது. அவர் வழியில் வந்த **நல்ல தம்பி சர்க்கரை மன்றாடியார்** கால் நடைப் பண்ணையைப் பெருக்கி, உயர்ந்த வகைப் பசுக்களையும் எருதுகளையும் வளர்த்து, பழைய கோட்டையின் புகழ் இமயம் முதல் குமரி வரையில் பரவுமாறு செய்தார்.

நல்ல தம்பி சர்க்கரை மன்றாடியார், இருபத்தெட்டாவது பட்டக்காரராயிருந்த நல்ல சேனாபதிச்

சர்க்கரை மன்ருடியார் அவர்களின் மூத்த மகஞவார். இவர், தந்தையார் இறக்கவே இளமைப் பருவத்தி லேயே பட்டக்காரர் ஆனுர். இவர் பல வகையிலும் தமது முன்னேர்களைக் காட்டிலும் மிக்க சிறப்புடன் விளங்கினுர். இவர் காலத்திலேயே பட்டக்காரர் என்னும் பெயர் தமிழ் நாடெங்கும் நன்ருய்த் தெரிய லாயிற்று. இவர் தமிழ் மொழிப் புலமையும், சைவப் பற்றும் சிறந்தவர். இவர் ஓய்வு நேரங்களைத் தமிழ் நூல்களைப் படிப்பதிலேயே கழித்தார். கொங்கு மண் டல சதகம், சிவன் மலை புராணம், சிவன் மலைக் குறவஞ்சி, காதல், மங்கல வாழ்த்து முதலிய செந் தமிழ்ச் செய்யுள் நூல்களை இவர் தாமே இயற்றி வெளியிட்டுள்ளார்.

இவர் பல பொது ஸ்தாபனங்களிலும் பங்கு கொண்டு பொது நலத்திற்கு அரிய சேவைகள் செய்து வந்தார்; கோயம்புத்தூர் ஜில்லா போர்டு அங்கத் தினராகவும், துணைத் தலைவராகவும், ஈரோடு தாலூக்கா போர்டு தலைவராகவும், கீழ்க் கோவை ஜில்லா போர்டு தலைவராகவும் பதவி வகித்து அரிய தொண்டுகள் செய்து வந்தார். இவர் கோவை ஜில்லாவுக்குச் செய்த சேவைகளைப் பாராட்டிப் பொது மக்கள் இவருடைய உருவப் படத்தை ஜில்லா போர்டு கட்டிடத்தில் திறந்து வைத்துள்ளனர். இவர் ஈரோடு கூட்டுறவு நில அடமான பாங்கின் தலைவராக வும், கோவை விவசாயக் கல்லூரியின் மேற்பார்வை யாளராகவும், ஈரோடு வட்ட அறநிலயக் குழுவின் தலைவராகவும், சென்னைச் சட்ட சபை உறுப்பினராக வும் பல ஆண்டுகள் தொடர்ந்து இருந்து பொது நலத்திற்குப் பலவகைகளில் தொண்டு புரிந்துள்ளார்.

1814—9

இவர் செய்த தொண்டுகளில் இவருடைய புகழை நாடெங்கும் பரவச் செய்தது பழைய கோட்டைக் கால்நடைப் பண்ணையே ஆகும். பிற்காலத்தில் சிறந்த கால்நடை வளர்ப்பாளராகப் பேரும் புகழும் பெறுவதற்கு ஏற்ற இயல்புகள் இவரிடம் இளமை யிலேயே காணப்பட்டன. இவர் பிள்ளைப் பருவத்தி லிருந்தே மாடுகளிடத்தில் மிக்க அன்புடையவராக இருந்தார். இவர்களுடைய முன்னோர்கள் முன்னமே கால்நடைப் பண்ணையை ஆரம்பித்து நடத்தி வந்த தால் இவர் இளம் பருவத்தில் எப்பொழுதும் மாடுக ளிடையிலேயே பழகி வந்தார்; இளங் கன்றுகளிடம் நெருங்கிப் பழகி இன்புற்றார்; அவற்றோடு கூடிக் குதித்து விளையாடி மகிழ்ந்தார். இப்பழக்கத்தால் இவருக்கு இயல்பாகவே மாட்டின் தன்மைகளும் நுட் பங்களும் தெரியவந்தன. இவர் அவை பற்றிய ஆராய்ச்சியில் ஆர்வங் கொண்டார். இவருக்குத் தமது முன்னோர் நடத்தி வந்த கால்நடைப் பண்ணை யைப் பெருக்குவதில் ஊக்கம் உண்டாகியது. இவ ருடைய ஆர்வத்தாலும் ஊக்கத்தாலும் கால்நடைப் பண்ணை நாளுக்கு நாள் வளர்ந்தது. சில நூறு மாடுகளே இருந்த பண்ணை இரண்டாயிரம் மாடு களைக் கொண்ட பெரும் பண்ணையாகப் பெருகியது.

கால்நடைப் பண்ணை நடத்துவதென்பது எளிய காரியம் அன்று. அதற்கு அடிப்படையாக ஆர்வமும் ஊக்கமும் வேண்டும்; நிறைந்த அனுபவம் வேண்டும்; மேய்ச்சல் நிலம், செல்வ வசதி முதலிய எல்லாம் வேண்டும். இவை யாவும் பட்டக்காரரிடம் குறை வறப் பொருந்தியிருந்தன. ஆகவே இவர் தமது பண்ணையை விரைவில் பெருக வளர்த்துச் சிறக்க

நடத்திப் புகழ் பெற்ருர். இவருடைய கால்நடைப் பண்ணை இன்று இந்தியாவிலேயே இணையற்றதாக விளங்குகிறது. அதனுல் பழைய கோட்டையின் பெயரும் பட்டக்காரர் புகழும் எங்கும் பரவியுள்ளன.

**காங்கேயம் எருது** என்னும் உயர்ந்த வகை மாடுகள் சிறந்த இனம் என்று இப்பொழுது எல்லோ ராலும் புகழப்படுகின்றன. நம் நாட்டினரால் மாத்திரம் அன்றி அயல் நாட்டு மக்களாலும் காங்கேயம் எருதுகள் மிகவும் புகழ்ந்து பாரட்டப்படுகின்றன. இவ்வாறு உலகப் புகழ் பெற்று விளங்கும் காங்கேயம் மாடுகளை இவரே அரும்பாடுபட்டுத் தமது பண்ணை யில் உற்பத்தி செய்தார். இப்பொழுது இம்மாடுகள் இந்தியா எங்கும் பரவி, விவசாயம் முதலிய பல வேலைகளுக்கும் பயன்பட்டு வருகின்றன.

இவர் பண்ணையில் மைசூர் மாடுகள், காங்கேயம் மாடுகள், ஆடுகள் முதலியவை ஆயிரக் கணக்கில் வளர்க்கப்படுகின்றன. மாடுகளே அன்றி நாட்டுக் குதிரை எனப்படும் ஒரு வகைக் குதிரைகளும் இவர் பண்ணையில் உற்பத்தியாகின்றன. இப்பண்ணையில் வளர்க்கப்படும் குதிரைகளில் காங்கேய நாட்டுக் குதிரைகள் சிறந்தவை. இவர் கால்நடைப்பண்ணையை அமைத்து நடத்தி வந்த முறை மிகவும் பாராட்டுதற்கு உரியதாகும். சென்னைக் கவர்னராக இருந்த பென்ட் லண்டு பிரபு, சர். ஜார்ஜ் ஸ்டான்லி, எர்ஸ்கின் பிரபு ஆகியோரும், அரசாங்கக் கால்நடை அதிகாரிகளும் இவருடைய பண்ணையைப் பார்வையிட்டு இவர் சேவையைப் புகழ்ந்து பாராட்டியுள்ளார்கள்.

பழைய கோட்டைப் பண்ணை தென்னுட்டிற்கே பெருமை தருவதொன்ருகும். இப்பண்ணையால்

தமிழ் நாட்டுப் பயிர்த் தொழிலுக்கு வேண்டிய மாடு கள் கிடைத்து வருகின்றன. இவ்வளவு சிறப்புள்ள இப்பண்ணை எல்லோரும் சென்று காணத் தக்கது. இதனைக் காண்பதனால் மாடு வளர்ப்பு முறைகளை அறியலாம்.

நல்ல தம்பி சர்க்கரை மன்றாடியார் அவர்கள் புகழ்பெற்ற கால்நடைப் பண்ணைக் காப்பாளராக விளங்கினார்; சிறந்த பொது நலத் தொண்டராக வாழ்ந்தார்; 'பட்டக்காரர்' என்று எல்லோராலும் மரியாதையாகச் சொல்லப்பட்டார். இவருடைய பெருமையைப் பாராட்டி அரசாங்கத்தார் இவருக்கு **ராய் பகதூர்** என்னும் பட்டத்தை வழங்கினர். இவ்வாறு பேரும் புகழும் பெற்று விளங்கிய இவர் தமது ஐம்பதாவது வயதில் காலமானார். இவர் மறைவு தமிழ் நாட்டு விவசாயத்திற்கும், கால் நடை வளர்ச்சிக்கும் மிகப் பெரிய நஷ்டமாகும்.

இவருக்குப் பிறகு இவரது மூத்த குமாரராகிய **நல்ல சேனாபதிச் சர்க்கரை மன்றாடியார்** அவர் கள் முப்பதாவது பட்டக்காரராக வந்துள்ளார். இவர் தமது தந்தையாரைப் போலவே பொது நலத் தொண்டில் ஊக்கமும் கால்நடை வளர்ச்சியில் ஆர்வ மும் உள்ளவர். இவர் மேற்பார்வையில் இப்பொழுது பழைய கோட்டைக் கால்நடைப் பண்ணை மிகச் சிறந்த முறையில் நடந்து வருகிறது.

| | | |
|---|---|---|
| கால்நடை | புலமை | இணையற்ற |
| போற்றுவது | பொதுநலம் | முறைகள். |
| இன்றியமையாத | பதவி | அரும்பாடு |
| மரபு | அறநிலையக்குழு | சேவை |
| வழங்கி | நுட்பம் | பாராட்டு |
| ஈடுபட்டு | எளிய | உரியது |
| பண்ணை | குறைவற | மரியாதை |

## கேள்விகள்

1. பழைய கோட்டை எங்கு இருக்கிறது? அது எதனால் புகழ்பெற்றது?

2. பட்டக்காரர் யார்? அவர்களுக்கு அப்பெயர் எப்படி வழங்கியது?

3. நல்ல தம்பி சர்க்கரை மன்றாடியார் வகித்த பதவிகள் யாவை?

4. அவர் இயற்றிய நூல்கள் யாவை?

5. அவர் செய்த பொதுநலத் தொண்டுகளில் முக்கியமானது எது?

6. பழைய கோட்டைப் பண்ணையில் வளர்க்கப்படும் மாடுகள், குதிரைகள் யாவை?

7. இப்பொழுது பண்ணையைக் கவனித்து வரும் பட்டக்காரர் யார்?

## பயிற்சி

1. பழைய கோட்டைப் பண்ணையைப் பற்றிய புத்தகங்களை வாங்கிப் படி.

2. பழைய கோட்டைப் பண்ணையை நேரில் சென்று பார்.

3. உன் ஊரிலிருந்து பழைய கோட்டைக்குப் போக வழி சொல்.

4. முன்னோர், புகழ், பொதுநலம், நஷ்டம், அடிமை —எதிர்ச்சொல் கூறு.

5. மரியாதை, பாராட்டு, இன்றியமையாத, கால் நடை, அரும்பாடு—இவற்றை உன் சொந்த வாக்கியங் களில் வைத்து எழுது.

6. புகழ் பரவியது (முதல் வேற்றுமை)
கால் நடைகளை வளர்த்தார் (இரண்டாம் வேற்றுமை)
வாளால் வெட்டினன் (மூன்றும் வேற்றுமை)
மகமதுகானுக்குச் செய்தி அனுப்பினர் (நான் காம் வேற்றுமை)
போர்க்களத்திலிருந்து திரும்பினர் (ஐந்தாம் வேற்றுமை)
தேசிங்கினது வீரம் (ஆறும் வேற்றுமை)
கட்டிடத்தில் வைத்துள்ளனர் (ஏழாம் வேற்றுமை)
தாயே ! வருக (எட்டாம் வேற்றுமை)



# செய்யுட் பகுதி

## 1. வாக்குண்டாம்

நல்லார் ஒருவர்க்குச் செய்த உபகாரம்
கல்மேல் எழுத்துப் போல் காணுமே ;—அல்லாத
ஈரமில்லா நெஞ்சத்தார்க் கீந்த உபகாரம்
நீர்மேல் எழுத்திற்கு நேர். (1)

உற்ற இடத்தில் உயிர் வழங்குந் தன்மையோர்
பற்றலரைக் கண்டால் பணிவரோ !—கற்றூண்
பிளந்திறுவ தல்லால் பெரும்பாரம் தாங்கின்
தளர்ந்து வளையுமோ தான் ? (2)

கான மயிலாடக் கண்டிருந்த வான்கோழி
தானும் அதுவாகப் பாவித்துத்—தானுந்தன்
பொல்லாச் சிறகைவிரித் தாடினற் போலுமே
கல்லாதான் கற்ற கவி. (3)

கவையாகிக் கொம்பாகிக் காட்டகத்தே நிற்கும்
அவையல்ல நல்ல மரங்கள் ;—சவை நடுவே
நீட்டோலை வாசியா நின்றான் குறிப்பறிய
மாட்டா தவன் நல்மரம். (4)

நல்லாரைக் காண்பதுவும் நன்றே ; நலமிக்க
நல்லார்சொல் கேட்பது வும்நன்றே ;—நல்லார்
குணங்கள் உரைப்பதுவும் நன்றே ; அவரோ
டிணங்கி இருப்பதுவும் நன்று. (5)

தீயாரைக் காண்பதுவும் தீதே ;—திருவற்ற
தீயார்சொல் கேட்பது வும்தீதே ;—தீயார்
குணங்கள் உரைப்பது வும்தீதே ; அவரோ(டு)
இணங்கி இருப்பதுவும் தீது. (6)

—ஔவையார்

## 2. நல்வழி

சாதி இரண்டொழிய வேறில்லை சாற்றுங்கால்;
நீதி வழுவா நெறிமுறையின்—மேதினியில்
இட்டார் பெரியோர்; இடாதார் இழிகுலத்தோர்;
பட்டாங்கில் உள்ள படி. (1)

ஆற்றுப் பெருக்கற் றடிசுடும்அந் நாளுமவ்வா
றூற்றுப் பெருக்கால் உலகூட்டும்—ஏற்றவர்க்கு
நல்ல குடிப்பிறந்தார் நல்கூர்ந்தார் ஆனாலும்
இல்லையென மாட்டார் இசைந்து. (2)

ஒருநாள் உணவை ஒழிஎன்றால் ஒழியாய்;
இருநாளுக் கேல்என்றால் ஏலாய்;—ஒருநாளும்
என்னோ யறியாய்; இடும்பைகூர் என்வயிறே,
உன்னோடு வாழ்தல் அரிது! (3)

ஆற்றங் கரையின் மரமும், அரசறிய
வீற்றிருந்த வாழ்வும் விழும் அன்றே;—ஏற்றம்
உழுதுண்டு வாழ்வதற் கொப்பில்லை கண்டீர்.
பழுதுண்டு வேறோர் பணிக்கு. (4)

பாடுபட்டுத் தேடிப் பணத்தைப் புதைத்து வைத்துக்
கேடுகெட்ட மானிடரே கேளுங்கள்;—கூடுவிட்டிங்
காவிதான் போயினபின் யாரே அனுபவிப்பார்
பாவிகாள் அந்தப் பணம்? (5)

ஒன்றை நினைக்கின் அது ஒழிந்திட் டொன்றாகும்;
அன்றி அதுவரினும் வந்தெய்தும்;—ஒன்றை
நினையாத முன்வந்து நிற்பினும் நிற்கும்.
எனையாளும் ஈசன் செயல். (6)

—ஔவையார்

# 3. நீதி வெண்பா

கற்ருேர் கனம்அறிவர் கற்ருேரே ; கற்றறியா
மற்ருேர் அறியார் ; வருத்தம் உறப்—பெற்றறியா
வந்தி பரிவாய் மகவைப் பெறுந்துயரம்
நொந்தறிகு வாளோ ? நுவல். (1)

கர்ப்பூரம் போலக் கடலுப் பிருந்தாலும்
கர்ப்பூரம் ஆமோ கடலுப்பு ?—பொற்பூறும்
புண்ணியரைப் போல இருந்தாலும் புல்லியர்தாம்
புண்ணியர்ஆ வாரோ ? புகல். (2)

சிற்றுணர்வோர் என்றும் சிலுசிலுப்பர் ; நன்றமைந்த
முற்றுணர்வோர் ஒன்றும் மொழியாரே.—வெற்றி பெறும்
வெண்கலத்தின் ஓசை மிகுமே ; விரிபசும்பொன்
ஒண்கலத்தில் உண்டோ ஒலி ? (3)

பொற்பறிவில் லாதபல புத்திரப்பே றெய்தலின் ஓர்
நற்புதல்வ னைப்பெறுதல் நன்ருமே.—பொற்கொடியே!
பன்றிபல குட்டி பயந்ததனுல் ஏது பயன் ?
ஒன்றமையா தோகரிக்கன் ருேது. (4)

பொன்னும் கரும்பும் புகழ்பாலும் சந்தனமும்
சின்னம் படவருத்தம் செய்தாலும்—முன்னிருந்த
நற்குணமே தோன்றும் ; நலிந்தாலும் உத்தமர்பால்
நற்குணமே தோன்றும் நயந்து. (5)

ஈக்கு விடம்தலையில் ; எய்துமிருந் தேளுக்கு
வாய்த்தவிடம் கொடுக்கில் வாழுமே ;—நோக்கரிய
பைங்கணர வுக்குவிடம் பல்லளவே ; துர்ச்சனருக்(கு)
அங்கமுழு தும்விடமே ஆம். (6)

## 4. விவேக சிந்தாமணி

### பயன்கொடாதவை

ஆபத்துக் குதவாப் பிள்ளை,
அரும்பசிக் குதவா அன்னம்,
தாபத்தைத் தீராத் தண்ணீர்,
தரித்திரம் அறியாப் பெண்டிர்,
கோபத்தை அடக்கா வேந்தன்,
குருமொழி கொள்ளாச் சீடன் ;
பாபத்தைத் தீராத் தீர்த்தம்,
பயனில்லை ஏழுந் தானே. (1)

### செல்வச் செருக்கு

செல்வம்வந் துற்ற காலைத்
தெய்வமும் சிறிது பேணர் ;
சொல்வன அறிந்து சொல்லார் ;
சுற்றமும் துணையும் நோக்கார் ;
வெல்வதே நினைவ தல்லால்,
வெம்பகை வலிதென் றெண்ணர் ;
வல்வினை விளைவும் ஓரார்
மண்ணின்மேல் வாழும் மாந்தர். (2)

### பணமில்லாதவர் பிணம்

பொருள்இல்லார்க் கின்பம் இல்லை ;
புண்ணியம் இல்லை ; என்றும்
மருவிய கீர்த்தி இல்லை ;
மைந்தரின் பெருமை இல்லை ;

கருதிய கருமம் இல்லை ;
　　கதிபெற வழியும் இல்லை ;
பெருநிலம் தனில்சஞ் சாரப்
　　பிரேதமாய்த் திரிகு வாரே. (3)

**மெய்யரின் பெருமையும் பொய்யரின் சிறுமையும்**

மெய்யதைச் சொல்வா ராகில்
　　விளங்கிடும் மேலாம் நன்மை ;
வையகம் அவரைக் கொள்ளும் ;
　　மனிதரில் தேவ ராவர் ;
பொய்யதைச் சொல்வா ராகில்
　　போசனம் அற்ப மாகும் ;
' நொய்யவர் இவர்கள் ' என்று
　　நோக்கிடார் அறிவு ளோரே. (4)

**துன்பம் எல்லோருக்கும் ஒன்றே**

' பாலுக்குச் சர்க்கரை இல்லை ' என் பார்க்கும்,
　　' பருக்கை அற்ற
கூழுக்குப் போடஉப் பில்லை ' என் பார்க்கும்,
　　' குற்றி தைத்த
காலுக்குத்தோற்செருப் பில்லை ' என் பார்க்கும்,
　　' கனக தண்டி
மேலுக்குப் பஞ்சணை இல்லை ' என் பார்க்கும்,
　　விதனம் ஒன்றே. (5)

## 5. சதகச் செய்யுள்

### வேளாளர் இயல்பு

நல்லதே வாலயம் பூசனை நடப்பதும்,
நாள்தோறும் மழைபொழிவதும்,
நாடிய தபோதனர்கள் மாதவம் புரிவதும்,
நவில்வேத வேதியரெலாம்
சொல்லரிய யாகாதி கருமங்கள் செய்வதும்,
தொல்புவி செழிக்கும் நலமும்,
சுபசோ பனங்களும், கொற்றவர்கள் செங்கோல்
துலங்குமனு நெறிமுறைமையும்,
வெல்லரிய சுகிர்தமொடு வர்த்தகன் கொள்விலையும்,
விற்பனையும், அளவில் புகழும்,
மிக்கஅதி காரமும், தொழிலாளர் சீவனமும்,
வீருன சூரர்வலியும்,
வல்லமைகள் சகலமும் வேளாளர் மேழியின்
வாழ்வினுல் விளைவதன்ருே ?
மயிலேறி விளையாடு குகனே ! புல் வயல் நீடு
மலைமேவு குமரேசனே ! (1)

## கலிகாலக் கொடுமை

தாய்புத்தி சொன்னால் மறுத்திடும் காலம் ; உயர்
	தந்தையைச் சீறுகாலம் ;
சற்குருவை நிந்தை செய் காலம் ; மெய்க் கடவுளைச்
	சற்றுமெண் ணாதகாலம் ;
பேய்தெய்வம் என்றுப சரித்திடும் காலம் ;
	புரட்டருக் கேற்றகாலம் ;
பெண்டாட்டி வையினும் கேட்கின்ற காலம் ; நற்
	பெரியார்சொல் கொளாதகாலம் ;
தேய்வுடன் பெரியவன் சிறுமையுறு காலம் ; மிகு
	சிறியவன் பெருகுகாலம் ;
செருவில்விட் டோடினர் வரிசைபெறு காலம் ; வசை
	செப்புவோர்க் குதவுகாலம் ;
வாய்மதம் பேசிவிடும் அனியாய காரர்க்கு
	வாய்த்தகலி காலம் ஐயா !
மயிலேறி விளையாடு குகனே ! புல் வயல்நீடு
	மலைமேவு குமரேசனே ! (2)

## 6. திருக்குறள்

தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது. (1)

ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய். (2)

இன்சொல் இனிதீன்றல் காண்பான் எவன்கொலோ
வன்சொல் வழங்குவது ? (3)

நன்றி மறப்பது நன்றன்று ; நன்றல்ல(து)
அன்றே மறப்பது நன்று. (4)

அடக்கம் அமரருள் உய்க்கும் ; அடங்காமை
ஆரிருள் உய்த்து விடும். (5)

ஒழுக்கம் விழுப்பம் தரலால், ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும். (6)

தீயவை தீய பயத்தலால், தீயவை
தீயினும் அஞ்சப் படும். (7)

நல்லா(று) எனினும், கொளல்தீது ; மேல் உலகம்
இல்எனினும், ஈதலே நன்று. (8)

தன்னெஞ்(சு) அறிவது பொய்யற்க ; பொய்த்தபின்
தன்னெஞ்சே தன்னைச் சுடும். (9)

இன்னாசெய் தாரை ஒறுத்தல், அவர்நாண
நன்னயம் செய்து விடல். (10)

## 7. வாழ்த்து

வாழிய செந்தமிழ் ! வாழ்கநற் றமிழர் !
வாழிய பாரத மணித்திரு நாடு !
இன்றெமை வருத்தும் இன்னல்கள் மாய்க !
நன்மைவந் தெய்துக ! தீதெலாம் நலிக !
அறம்வளர்ந் திடுக ! மறம்மடி வுறுக !
ஆரிய நாட்டினர் ஆண்மையோ டியற்றும்
சீரிய முயற்சிகள் சிறந்துமிக்,கோங்குக !
நம்தே யத்தவர் நாடொறும் உயர்க !
வந்தே மாதரம் ! வந்தே மாதரம் !

—பாரதியார்



